கம்ப்யூட்டரை மிஞ்சும் ஸிஸிஎம்

# எலகன்ஸா லவ்லின்

பாலியிஸ்டர் – காட்டன்
சூட்டிங் 67%-33%

பாலியிஸ்டர் – காட்டன்
ஷர்ட்டிங் 67%-33%

## கலையுலகின் மனோரதம்



இன்று கம்ப்யூட்டர் அளிக்கும் சித்திரக் கோலங்கள், வியப்பூட்டும் புதுமைகள், கற்பனையைக் கடக்கும் எழில் படைப்புகள், ஸிஸிஎம் எலகன்ஸா சூட்டிங்குகள், லவ்லின் ஷர்ட்டிங்குகள் நவநாகரிக யுவர்களுக்கு மனம் நிறைந்த முழுமை அளிக்கின்றன.

இதர படைப்புகள்:
நியூ மிர்ராபோ புடவைகள் •
ஸ்ட்ரேஞ்சர் ஷர்ட்டிங் •
ஸில்வர் கிங் வேஷ்டி • மல் •
கேஸ்மென்ட் துணிகள்.

**ஸிஸிஎம் அளிப்பது வண்ணப் புதையல்கள்**



**தி கோயம்பத்தூர்
காட்டன் மில்ஸ்
லிமிடெட்**

ADWAVE/CCM 186

# இந்தியன் பாங்கின்

## ரொக்க சர்டிபிகேட்டுகளை வாங்கி பயனடையுங்கள்!

லாபகரமான ஓர் வாய்ப்பு உங்களுக்காகவே உள்ளது. ரூ. 602.77 மட்டுமே செலுத்தி ரூ. 1000/-க்கான ஓர் ரொக்க சர்டிபிகேட்டை நீங்கள் வாங்கலாம். அல்லது பல்வேறு கால அளவுள்ள, ரூ. 25/- ரூ. 50/- மற்றும் ரூ. 100/. போன்ற குறைந்த தொகைக்கான ரொக்க சர்டிபிகேட்டுகளையும் வாங்கலாம்.




| காலம் | டெபாசிட் | டெபாசிட் | டெபாசிட் |
|---|---|---|---|
| 61 மாதங்கள் | ரூ. 602.77 | ரூ. 301.39 | ரூ. 60.28 |
| 48 மாதங்கள் | ரூ. 698.37 | ரூ. 349.19 | ரூ. 69.84 |
| 36 மாதங்கள் | ரூ. 764.17 | ரூ. 382.09 | ரூ. 76.42 |
| திருப்பி அளிக்கப்படுவது | ரூ. 1000/- | ரூ. 500/- | ரூ. 100/- |



உங்கள் சேமிப்பு வளருமிடம்

# இந்தியன் பாங்க்

(இந்திய அரசுக்கு முழுதும் சொந்தமானது)

தலைமை அலுவலகம்:

17, வடக்கு கடற்கரைச் சாலை, சென்னை-600001.

# ஆயிரக்கணக்கான நம் நாட்டு மக்கள் தங்களுடைய சேமிப்பை உங்கள் தொழிலில் முதலீடு செய்வதென்பதன்றே நம்பிக்கைக்குச் சான்று!



இச்சம்பவம் பல வருடங்களுக்கு முன் நடந்தது—அதாவது டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனி துவங்கியபொழுது. ஆயிரக்கணக்கான மக்கள் 'அமருவதற்கு ஆசனமும், உண்பதற்கு உணவும்' உடன் எடுத்துச் சென்று டாடாவின் அலுவலகத்தின் முன் அவரது புது கம்பெனியில் பங்கு (ஷேர்) வாங்கக் காத்து நின்றனர். பணக்காரர், ஏழை, இரு சாராருமே ஒன்றுபோல் பணத்தை முதலீடு செய்தனர்.

மூன்றே வாரங்களில் சுமார் எட்டாயிரம் மக்கள் 230 லட்சம் ரூபாயை புதிய தொழில் துவக்கத்தில் முதலீடு செய்தபொழுது ஸ்ரீ தொராப்ஜீ டாடா அவர்கள் இச்சாதனையைப்பற்றி பெருமையுடன் எழுதியதாவது: 'அது ஒரு முற்றும் புதிய சுதேசி ஸ்தாபனமாக, சுதேசிகளின் பணத்தையும், சுதேசிகளின் ஆக்கத்திறனையும் கொண்டு உருவாக்கப்பட்டது'.

அது நடந்தது 1907ம் ஆண்டில். இன்றும் டாடா ஸ்டீலில் அதே பொறுப்புணர்ச்சி தலைதூக்கி நிற்கிறது. இந்திய மக்களில் சுமார் எழுபத்து ஐயாயிரம் பேர் டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனியில் பங்குதாரர்களாக இருக்கும் அதே பெருமிதம் இன்று ஒரு விதத்தில் டாடாவில் தலைமுறையாக வரும் சம்பிரதாயமாகவே ஆகிவிட்டதென்று கூறலாம்.




**டாடா ஸ்டீல்**

HT-TIS-7352

# கல்கி

ஆனந்த தை. 13 ★ ஜனவரி 26, 1975

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




## அடுத்த இதழில்:

**பொன் விழாக் காணும் காந்தி ஆசிரமம்**

படங்கள்–விளக்க உரைகள்

**நகர்வலம்: நாகபுரி**

நமது உதவி ஆசிரியர் திரு **விழிநாதனின்** அனுபவங்கள்

**போட்டிக் கதை: தேய்ந்த பாதை...**



# குழந்தைச் செல்வங்கள் எப்பொழுதும் முன்னணியில் நின்றிட அதிக சக்தியின் தேவையை நிறைவு செய்யுங்கள்







## நீங்களும் உங்கள் குழந்தைக்கு நாள்தோறும் போர்ன்விடா கொடுங்கள்

உங்கள் குழந்தை முன்னணியில் நின்றிட அதிக சக்தியின் தேவையை பூர்த்தி செய்ய வல்லது மால்ட், பால், சர்க்கரை, கோகோ அடங்கியுள்ள போர்ன்விடா வேயாதும். ஒவ்வொரு டம்ளரிலும், ஊட்டத்திற்கு அதி தேவையான புரதம் கார்போஹைட்ரேட்கள், கலோரிகள் அடங்கியுள்ளது.

அதனாலேயே உங்கள் குழந்தைக்கும் பிரதி தினமும் போர்ன்விடா கொடுங்கள் — இரண்டு வேளைகளிலும், உங்களுக்கும் அது உகந்தது. போர்ன்விடா குடும்பத்தில் எல்லோரும் விரும்பும் ஒரு பானம்.

காட்பரிஸ்

# போர்ன்விடா

வளரும் குழந்தைகளுக்கு
இனிய போர்ன்விடா




OBM-4024 TM

# அர்த்தமுள்ள பேச்சும்.....

சர்வதேச ஹிந்தி மகாநாட்டைத் தொடங்கிவைத்த பிரதமர் புத்திசாலித்தனமாகப் பேசியிருக்கிறார். மகிழ்கிறோம். ஹிந்தி யார் மீதும் திணிக்கப்படமாட்டாது என்று உறுதி அளித்திருக்கிறார். அது மட்டுமா ? ஹிந்தி வெறியர்கள்தாம் அதன் வளர்ச்சிக்குத் தடையாக இருப்பவர்கள் என்று சூடு கொடுத்திருக்கிறார். ஆயிரத்தில் ஒரு வார்த்தை. வாழ்த்துகிறோம்.

இவ்வளவு பேசுகிறவர் ஹிந்தியைத் தாய்மொழியாகக் கொள்ளாதவர்கள் விரும்பிக் கேட்கும் வரை ஹிந்தி ஆட்சி மொழியாகாது என்று சட்டபூர்வமாகவே ஓர் ஏற்பாட்டைச் செய்துவிடலாம். அனைத்து ராஜ்யங்களுக்கும் வெளி உலகுக்கும் தொடர்பு மொழியாக இப்போது உள்ளதுபோல் ஆங்கிலமே இனியும் இருந்துவிட்டுப் போகலாம்.

இந்தியைத் திணிக்கமாட்டோம் என்கிற அரசுதான் இந்தி வளர்ச்சிக்காகத் திட்டத்தில் இருபத்திரண்டு கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறது. எத்தனையோ அத்தியாவசியத் திட்டங்கள் நிதிப் பற்றாக்குறையால் வாடிக் கொண்டிருக்க இப்போது இதற்கு என்ன அவசரம் நேர்ந்ததோ? மேலும் கோடி கோடியாகப் பணத்தைச் செலவிடுவதால் சில ஹிந்தி பண்டிதர்களைத் தோற்றுவிக்கலாமே ஒழிய மொழியை வளர்க்க முடியாது. மொழி வளர்ச்சி என்பது சந்தர்ப்பச் சூழ்நிலைகளைப் பொறுத்து இயல்பாக ஏற்பட வேண்டிய ஒன்று.

பிரதமரின் சீரிய யோசனையை ஹிந்தி வெறியர்கள் அந்த மகாநாட்டிலேயே அவமதித்துவிட்டார்கள். ஆங்கில டைப்ரைட்டர்களைக் கடலில் எறிய வேண்டுமாம் ! ஆங்கிலத்தில் பேசுவோர் முன் உள்ள 'மைக்'கை உடைத்து எறிய வேண்டுமாம்! பேசியிருக்கிறார்கள். மைக்கை உடைப்பதில் ஆரம்பித்துக் கையை முறிப்பதில் இறங்குவார்கள் இந்த வெறியர்கள். ஹிந்தி பேசாத மக்கள் விழிப்புடன் இருந்து அவ்வப்போது எதிர்ப்பைத் தெரிவிக்காது போனால் ஏமாந்து போவார்கள்.

கல்கி

மலர் 34

இதழ் 26



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# ....அபத்தச் சொற்பொழிவும்

பிரதமர் எதிர்க்கட்சிகளைச் சாடும் வேகத்தைப் பார்த்தால் தேர்தல் சீக்கிரம், வெகுசீக்கிரம் வந்துவிடும் என்றே தோன்றுகிறது. உண்மையா, உளறலா என்றுகூடச் சிந்தியாமல் உணர்ச்சிவசப்பட்டுப் போடு போடு என்று போடுகிறார்.

எதிர்க் கட்சியினர் எல்லாரும் நாஜிகளாம். ஹிட்லரைப் போல் பொய்யையே திரும்பத் திரும்பச் சொல்வதன் மூலம் அதை உண்மையாக்கிவிடப் பார்க்கிறார்களாம்! இதைவிடப் பிதற்றல் வேறு என்ன இருக்க முடியும் ? இந்திரா ஆட்சியை எதிர்ப்பவர்கள் எல்லோரும் பொய்யர்கள்; இந்த அம்மையார்தான் அரிச்சந்திரன் வம்சத்தில் பிறந்தவர் !

பார்க்கப் போனால் 'சோஷலிஸம்' 'சோஷலிஸம்' என்றும் ஏழைமையை ஒழிப்போம்' என்றும், பசுமைப் புரட்சி' என்றும் கோஷங்களை எழுப்பி மக்களை மயக்குகிற இந்திரா கட்சியும் ஆட்சியும்தாம் பொய்யை மெய்யாக்க முயலும் மாபெரும் குற்றத்தைப் புரிந்து வருகின்றன. ஆனால் இந்த முயற்சியில் அந்த ஆட்சியும் கட்சியும் படுதோல்வி அடையும். உண்மைகள் நிரந்தரமானவை. அவற்றுக்கு அழிவு கிடையா. மாயையும் மயக்குவாதங்களும் சில காலம் மக்களை ஏமாற்றலாம். ஆனால் அவர்கள் விழிப்படையும் நேரம் வராமல் போகாது. மாயா வாதங்களால் கவரப்பட்டுத் தேசம் குட்டிச்சுவராக அனுமதித்துவிட்டோம் என்பதை மக்கள் இப்போது உணர்ந்து வருகிறார்கள்.


ஸர்வோதயா
பாதை மாற்றம்?
துறைமுகத் தொழிலாளர்
பைலட் ஸ்டிரைக்
ரயில் ஸ்டிரைக்

# என்ன சேதி?

## ஆரியர் — திராவிடர் என்னும் அறிவீனம்

ராமர் பொம்மையை எரிக்கவும் ராவணனை மறத் தமிழன் என்று வணங்கவும் செய்யும் பண்பாளர்கள் கவனிக்க வேண்டும். திராவிட நாடு, திராவிட இனம் என்று பிரித்துப் பேசும் அன்பர்கள் யோசிக்க வேண்டும்.

மொஹன்ஜதாரோ லிபி பற்றி ருஷ்யர்கள் நடத்திய ஆராய்ச்சியின் விளைவாக அந்த மொழி தொல் திராவிட மொழியாக இருக்கக் கூடும் என்று கருதுகின்றனர்! இதை யொட்டி ஆராய்ச்சியாளர்கள் ஒன்றுக்கு இரண்டாக நூல்கள் எழுதியுள்ளனர்.

ருஷ்ய அறிஞர் சொல்லுகிறார்: ''மொஹன்ஜதரோ லிபியின் மொழி திராவிட மொழி என்ற கருத்தை ஒப்புக் கொண்டால் அது பரவி யிருந்த இடங்களெல்லாம் திராவிடக் கலாசாரமும் பரவி இருந்தது எனலாம்!'' அதோடு விட்டாரா அறிஞர்? திராவிடர்கள் வட திசையிலிருந்துதான் இந்தியாவுக்கு வந்திருக்க வேண்டுமே யன்றித் தெற்கே இருந்து வடக்கே சென்றிருக்க முடியாது என்று அறுதியிட்டுக் கூறுகிறார்! இந்தியாவுக்கும் மத்திய ஆசியாவுக்கும் இடையே கலாசாரத் தொடர்பு கி. மு. 3000 ஆண்டுகளிலேயே ஆரம்பமாயிற்றாம். மத்திய ஆசியக் குடியரசு ஒன்றில் நடத்திய தொல்பொருள் ஆராய்ச்சியில் ஹரப்பா நாகரிக காலத்தைச் சேர்ந்த பானை ஓடுகள் முத்திரைகள் அகப்பட்டனவாம். மத்திய ஆசியாவைச் சேர்ந்தவர்கள் பலர் இந்தியாவுக்கு வந்தனர் என்பதற்கும் தங்கள் கலாசாரத்தின் அம்சங்களைத் தங்களுடன் கொண்டு வந்தனர் என்பதற்கும் இவருக்கு இந்தியாவில் சான்றுகள் கிடைத்துள்ளன!

வடக்கு — தெற்கு; திராவிடம் — ஆரியம் போன்ற அர்த்தமற்ற வேற்றுமைகளுக்கும் கோஷங்களுக்கும் இனியேனும் இடம் கொடாதிருப்போம். நாம் எல்லோரும் இந்தியர், சகோதரர் என்ற உணர்வைப் பெற்று நாடு முன்னேற உழைப்போம்.

## விடுமுறைகளுக்குப் பஞ்சமில்லை!

இரண்டாவது சனிக்கிழமை, ஞாயிற்றுக் கிழமை, போகி, பொங்கல், வள்ளுவர் தினம் என விடுமுறைகள் வந்தது கிரிக்கெட் மாட்ச் பார்க்க வசதியாக இருந்திருக்கலாம். ஆனால் இத்தனை விடுமுறைகள் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு ஏற்றதல்ல.

ருஷ்யாவில் லெனின் தினம் என்றால் விடுமுறை உண்டுதான். ஆனால் அந்த விடுமுறையை வீணாக்க மாட்டார்கள். அந்தந்த வட்டார மக்கள் ஒன்று சேர்ந்து ஒரு சாலை அமைப்பார்கள்; அல்லது ஒரு மருத்துவவிடுதி கட்டுவார்கள். இங்கே வள்ளுவர் தினத்தன்று கிரிக்கெட் மாட்ச் பார்க்கிறோம், காந்திஜயந்தி அன்று பிக்னிக் போகிறோம்!

அதுதான் போகட்டும் என்றால் கிரிக்கெட் மாட்சில் வெற்றி பெற்றதைக் கொண்டாடக் கல்லூரி, பள்ளிகளுக்கு வியாழக்கிழமையும் விடுமுறையாம்! வெட்கக் கேடு!

## இந்தியாவுக்கு உகந்த திட்டம்

விஸ்தாரமான நிலப் பரப்பும் குறைந்த ஜனத்தொகையும் உள்ள நாடுகள் விவசாயத்தை இயந்திர மயமாக்கி ஏராளமாய் உணவு உற்பத்தி செய்து ஏற்றுமதியும் பண்ணுகின்றன. குறைந்த விஸ்தீரணமும் குறைந்த ஜனத்தொகையும் உடைய சில நாடுகள் தொழில்துறையில் விஞ்ஞான ரீதியான தானியங்கு முறைகளைப் புகுத்தி வியத்தகு முன்னேற்றம் காண்கின்றன. உற்பத்தியாகும் பொருள்களை ஏற்றுமதி செய்து பதிலுக்கு உணவுப் பொருள்களை இறக்குமதி செய்து கொள்கின்றன. மூன்றாவதாக ஒரு ரகம் உண்டு. இந்தியாவைப் போன்று விஸ்தாரமான நிலப்பரப்பும் மிக அதிகமான

---

ராஜாஜி சிந்தனை

## நாட்டை நாசமாக்கும் சாதனை!

''கட்டுப்பாடு மோசடிகளைத் தோற்றுவிக்கிறது. உண்மையை அமுக்குகிறது. கறுப்புச் சந்தைக்குக் கட்டியம் கூறுகிறது. செயற்கையான பற்றாக்குறையை உண்டாக்குகிறது. இவற்றை விடக் கேவலம் என்னவெனில் அது மக்களைச் செயலிழக்கப் பண்ணுகிறது; ஊக்கமிழக்கச் செய்கிறது. தன் கையே தனக்குதவி என்ற போதனையை அர்த்தமற்றதாக்குகிறது. இது ஒரு கேவலமான விஷயம். இந்நிலையைத் தோற்றுவிப்பது, பெருமளவில் சகோதர சகோதரிகளைக் கொல்வதற்கு அடுத்தபடியான ஒரு பயங்கரச் செயலாகும்.''

காந்திஜியின் ஒரு பிரார்த்தனைக் கூட்டப் பேச்சிலிருந்து திரு மஸானி மேற்படி வாசகத்தை எடுத்துச் சொன்னார். மகாத்மா காந்தி எந்தக் கொள்கையாயினும் அதன் ஆன்மீக விளைவுகளைப் பற்றித் தீவிரமாக எண்ணிப் பார்ப்பார். எனவேதான் பர்மிட் லைசென்ஸ் கண்ட்ரோல் ராஜ்யத்தின் கொடிய விளைவுகளுக்கு அவ்வளவு முக்கியத்துவம் தந்து பேசினார்.

ஆனால் நமது நிதி மந்திரிகளும், திட்டம் தீட்டுபவர்களும் தனிமனிதனின் ஆன்மாவை முக்கியமற்றதாகக் கருதினர். அதனை அரசு தன் இஷ்டப்படி ஆணையிட்டு வளைக்கலாம் என்று எண்ணினர். இதன் விளைவாக அவர்கள் மிகக் குறுகிய காலத்தில் நமது தேசத்தை நாசமாக்கும் சாதனை புரிந்துள்ளனர்!

—சுயராஜ்யா, செப்டம்பர், 18, 1965

ஜனத்தொகையும் உள்ள நாடுகள். முந்தைய இரு ரக நாடுகளிலும் பின்பற்றப்படும் பொருளாதாரக் கொள்கைகள் இந்தியாவுக்குப் பொருந்தாதவை. அவை இங்கு படுதோல்வி அடையும். ஆண்டுதோறும் எத்தனையோ லட்சக்கணக்கில் ஜனத்தொகை அதிகரித்து வரும் ஒரு நாட்டில் தொழில் வளர்ச்சி மூலம் அனைவருக்கும் வேலை வாய்ப்பு அளிப்பது சாத்தியமா? பெரும்பான்மை மக்கள் கிராமப்புறங்களில் வசிக்கும் இந்நாட்டில் நமது பொருளாதாரம் விவசாயத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்தாலன்றி விமோசனமுமில்லை; பெருகி வரும் ஜனத்தொகைக்கு வயிறு நிரம்பவும் வழியில்லை. துரதிர்ஷ்ட வசமாக நமது ஐந்தாண்டுத் திட்டங்களைத் தீட்டியவர்கள் பசுமைப் புரட்சி பற்றிப் பேசினார்கள். ஆனால் ராட்சத ஆலைகளின் நிர்மாணத்துக்கே திட்டங்களில் முதலிடம் தந்தார்கள்.

கங்கை — காவிரி இணைப்பு பற்றிப் பேசுகிறோம். இது ரொம்பக் கடினமான காரியம் — இடையில் மேட்டுப் பூமி இருப்பதால். ஆனால் தெற்கே உள்ள நதிகளைச் சரிவான பூமியாதலால் இணைப்பது ஒப்புநோக்குகையில் மிக எளிது. நதி நீரெல்லாம் கடலில் விழுந்து வீணாகாமல் விவசாயத்துக்குப் பயன்படுத்தலாம். எத்தனையோ ஆயிரம் கோடிகளை ராட்சஸ ஆலைகளுக்குச் செலவிடத் தயாராயிருப்போர் சில நூறு கோடிகளை இதற்கு ஒதுக்கக் கூடாதா? தடையாயிருப்பது சுயநல அரசியலன்றி வேறென்ன?

இன்றைய உணவு நெருக்கடி பற்றிப் பேசுகையில் சிந்தனைக்கு விருந்தான இக் கருத்துக்களை வெளியிட்டவர் திரு எஸ். ஒய். கிருஷ்ணசாமி. பாரதிய லோக தளம் ஏற்பாடு செய்திருந்த ராஜாஜி நினைவுச் சொற்பொழிவில் பேசிய வேறு இருவர்: ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட், டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி. முன்னவர் இன்றைய தார்மீக நெருக்கடி குறித்தும் பின்னவர் இன்றைய பொருளாதார நெருக்கடி குறித்தும் சொற்பொழிவாற்றினர். ஆணவம் மிக்க இந்திரா அரசு அறிஞர்களின் யோசனையை ஏற்கப் போவதில்லை. எதிர்க் கட்சிகளாவது ஏற்று இந்த அடிப்படைகளில் இணையக் கூடாதா?

## வதைத்தது போதும்; வாழ விடுங்கள்!

கம்யூனிஸ்டுகளை நம்புவதற்கில்லை என்பதற்கு மீண்டும் வலுவான சான்று கிடைத்திருக்கிறது. ஏற்கனவே சொல்லொணாத் துயரடைந்துள்ள வியட்நாமில் கம்யூனிஸ்டுகள் மீண்டும் யுத்த அரக்கனின் தளைகளை அவிழ்த்து விட்டிருக்கின்றனர்.

கிஸ்ஸிஞ்சருடைய பெரும் முயற்சியால் வியட்நாம் குறித்துப் பன்னிரண்டு நாடுகள் சேர்ந்து சர்வதேச மகாநாடு நடத்தின. அமெரிக்கா, சீனா, ருஷ்யா உள்ளிட்ட பல நாடுகளும் கையெழுத்திட்டுச் சமாதான ஒப்பந்தமும் உருவாயிற்று. அமைதி இனியேனும் நிலவும் என்று எதிர்பார்க்கும் தருணத்தில் திடும்மென்று இப்போது கம்யூனிஸ்டுகள் தெற்கு வியட்நாமில் ஊடுருவி இரு மாநிலத் தலைநகர்களைக் கைப்பற்றியிருக்கிறார்கள். தென் வியட்நாம் ஐ. நா. சபைக்கும் சமாதான ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட நாடுகளுக்கும் நிலைமையை விளக்கி முறையிட்டுக் கொண்டிருக்கிறது.

வியட்நாமிய மக்களை உயிருடன் வதைத்தது போதும்; வாழ விடுங்கள் என்று கம்யூனிஸ உலகைக் கேட்டுக் கொள்கிறோம்.

## ஒரு மெய்ப்பொருள்

இந்த ஆண்டு பொங்கல் வாழ்த்துக்களில் கவனத்தைக் கவரக்கூடிய ஒரு வாழ்த்தைக் கீழே தருகிறோம்.

"யாரிடம் ஒழுக்கம் இருக்கிறதோ இல்லையோ அரசியல்வாதிகளுக்குக் கண்டிப்பாக ஒழுக்கம் தேவை."

இந்த அரிய கருத்தை யாராகிலும் ஒரு மடாதிபதி கூறியிருப்பார் என எண்ணுகிறீர்களா? இல்லவே இல்லை!

ஒரு காந்தீயவாதியாக இருக்குமோ, அல்லது விநோபாவின் தொண்டர்களில் எவராகிலும் இருக்குமோ? ஜெயப்பிரகாஷ்தாம் இப்படிச் சொன்னாரோ என்று நினைத்தால் உங்களுக்குப் பெருத்த ஏமாற்றம்தான்.

பின் யார்தான் கூறியது என்கிறீர்களா?

மதுரை முத்துதான் மேற்கண்டவாறு சொல்லியிருக்கிறார். தி. மு. க. பாசறையில் நீண்ட காலம் பழகிய அவர் மேற்கண்ட முடிவுக்கு வந்திருப்பதில் எவ்வளவோ உட்பொருள் இருக்கிறது.

எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும்
அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

## கைதிகளிடமும் கருணை வேண்டும்!

நமது நாட்டில் நீதி பரிபாலனம் எப்படி நடக்கிறது என்று ஆராய்ந்த சர்வதேச ஜூரி குழு அதிசயத்தில் ஆழ்ந்து போயிற்று. அடடா! தர்மத்துக்குப் பேர் போன இந்தியாவிலா இப்படி நடக்கிறது என்று நினைத்தது. கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து ஓடி வந்த லட்சக்கணக்கான அகதிகளுக்கு அருமையான முறையில் முகாம் நடத்தி அகில உலகப் பாராட்டைப் பெற்ற இந்தியாவிலா இந்த நிலைமை என்று ஆச்சரியப்பட்டது.

குற்றம் சாட்டப்பட்டவர்களை வெகுசீக்கிரம் நீதி மன்றத்துக்குக் கொணர்ந்து நியாயம் வழங்க வேண்டும். அப்படியின்றி அவர்களைச் சிறையில் தள்ளிவிட்டு வழக்கைத் தயாரிக்க மாதக் கணக்கில், சில சமயம் வருஷக்கணக்கில்கூடக் காலதாமதம் செய்கின்றனர். கடைசியில் தீர்ப்பு வழங்கப்படும் போது பார்த்தால் ஆறு மாதச் சிறைத் தண்டனை பெறுகிறவர் ஏற்கனவே ஓராண்டு காலம் சிறையில் இருந்திருப்பார். இது போன்ற அக்கிரமங்கள் தவிர்க்கப்பட வேண்டும் என்றதுடன் சிறைக்கூடங்களின் மிக மோசமான சூழ்நிலை பற்றியும் வருத்தப்பட்டிருக்கிறது மேற்சொன்ன சர்வதேசக் குழு.

# பாங்க் ஆப் மதுரை

**மகிழ்வுடன் அளிக்கும்**

## பல பரிசுத் தொகைகளுடன் கூடிய சிறு சேமிப்புத் திட்டம்

**ஒரே ஒரு முறை ரூ. 50/- மட்டுமே முதலீடு செய்யுங்கள்**

*10 ஆண்டுகளில் பத்து சத விகித வட்டியுடன் உங்கள் டெபாசிட் தொகையை இரட்டிப்பாக்கி வழங்குவதுடன் அடியிற்கண்ட பரிசுத் தொகைகளையும் ஒவ்வொரு மாதமும் அளிக்கின்றோம்.*

| பரிசு | தொகை |
|---|---|
| முதல் பரிசு | ரூ. 20,000 |
| இரண்டாவது பரிசு | ரூ. 10,000 |
| மூன்றாவது பரிசு | ரூ. 5,000 |
| நான்காவது பரிசு | ரூ. 3,000 |
| ஐந்தாவது பரிசு | ரூ. 2,000 |
| ஆறாவது பரிசு | ரூ. 1,000 |
| ஏழாவது பரிசு ரூ. 100 வீதம் 203 ஆறுதல் பரிசுகள் | ரூ. 20,300 |

**ஒவ்வொரு மாதமும், ரூ. 61,300 பரிசுத் தொகைகளாக வழங்குகிறோம். 209 டெபாசிட் ரசீதுகளுக்கு இதேபோல் 120 மாதங்கள். 16-ல் ஒருவர் பரிசு பெறச் சிறந்த சந்தர்ப்பம்.**

**15-2-1975 வரை டெபாசிட்டுகள் பெற்றுக் கொள்ளப்படும்**

*எங்களது மற்றொரு கவர்ச்சிகரமான சிறு சேமிப்புப் பரிசு டெபாசிட் திட்டத்தின் மூலம் ரூ. 500/- டெபாசிட் செய்து 10 ஆண்டுகளில் ரூ. 1000/- ஆக பெறுவதோடு ரூ. 2,00,000/-ஐ ஒவ்வொரு மாதமும் முதல் பரிசாக அளிக்கின்றோம்.*

**ஒவ்வொரு மாதமும் ரூ. 5,93,000/- வீதம் 120 மாதங்கள் பரிசுத் தொகைகள் வழங்குகிறோம் — டெபாசிட் செய்ய கடைசி தேதி 16-6-1975**

★ ஞாபகத்தில் கொள்ளுங்கள். ஒரே ஒரு முறைதான் நீங்கள் டெபாசிட் செய்கின்றீர்கள். 10 ஆண்டுகளில் உங்கள் முதலீட்டை இரட்டிப்பாக திரும்பப் பெறுவதோடு பரிசுத் தொகைகள் பெற 120 அரும்பெரும் வாய்ப்புக்கள் உங்களுக்கு உள்ளன.

உங்கள் வளமான எதிர்காலத்திற்கு மேற்கண்ட எங்களது டெபாசிட் திட்டங்களில் சேருங்கள்.

அருகாமையில் உள்ள எங்களது கிளையை அணுக வேண்டுகின்றோம்.



## பாங்க் ஆப் மதுரை லிட்.

ரிஜிஸ்டர்டு அண்டு சென்ட்ரல் ஆபீஸ்

33, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-625001

**பழனியப்பன் ராமசாமி**

*ஜெனரல் மானேஜர்*



# ஊருக்குக் கனகதாரை





ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சங்கராசாரிய சுவாமிகள்



ஜனங்கள் செய்த தப்புக்குத் தண்டனையாகவே பஞ்சம் வந்தது. நம் பாவம் மற்றவர்களையும் தாக்குகிறது என்பது பஞ்சத்தினால் தெரிகிறது. பஞ்சம் என்று வந்தால் ஒரு நாட்டில் இருக்கப்பட்ட நல்லவர்களுக்குக் கூடக் கஷ்டம் உண்டாகி விடுகிறது. ஒருவன் பண்ணிய பாபம் ஊரையே பாதிக்கிறது. இப்படித் தொண்டை மண்டலவாசிகள் பஞ்சத்தில் பரிதவிப்பதைப் பார்த்தவுடன் அம்பாளுக்கு மனசு இளகிவிட்டது. அவர்களைத் தண்டித்தது போதும் என்று நினைத்தாள். இப்போது அவர்களுக்கு உடனே கிடைக்க வேண்டியது ஆகாரம். மேதையைத் தர உடனடி அவசரமில்லை. இப்போது உணவு தான் தர வேண்டும். ஆனால் தானிய சம்ருத்தி (செழிப்பு) உடனே வந்துவிடாது. தன சம்ருத்தி இருந்தால் அக்கம் பக்கத்திலிருந்து தானியம் வாங்கிக் கொண்டு விடலாம். அம்பாள் கருணை கொண்டாள். உடனே கனகவர்ஷமாகவே — பொன் மாரியாகவே — பொழிந்துவிட்டாள். 'பொன் விளைந்த களத்தூர்' என்றே ஓர் ஊர் இருக்கிறது.

பொன் மழை பெய்த இந்தக் காமாட்சியையே தம் ஜீவியத்தின் கடைசியில் நம் ஆசாரியாள், ஸ்ரீ சங்கர பகவத்பாதாள், வந்தடைந்ததிலும் பெரிய பொருத்தம் இருக்கிறது. ஏனென்றால் அவருடைய வாக்கிலிருந்து முதன் முதலாக வந்த ஸ்தோத்திரம் கனகதாரா ஸ்தவமேயாகும். மௌனமாக இருந்த பரமேசுவரன் வாக்குவர்ஷத்தைப் பொழிந்து மக்களைக் கடைத்தேற்றவே நம் ஆசாரியாளாக வந்தார். அவர் ராமநாதத்திலிருந்து பதரிநாதம் வரை — ஆஸேது ஹிமாசலம் என்பார்கள் — யாத்திரை செய்து, அத்வைத ஸ்தாபனம் செய்துவிட்டு இந்தக் காஞ்சிபுரத்தில் உள்ள அம்பாளிடம் தான் வந்தார். காமாக்ஷியின் உக்ரத்தைச் சமனப்படுத்திச் சாந்தமாக்கி ஸ்ரீ சக்ரப் பிரதிஷ்டை செய்தார். அவளுடைய பீடத்தில் இருந்து கொண்டு, ஷண்மத ஸ்தாபனம் செய்தார்; ஸர்வக்ஞ பீடாரோகணம் செய்தார். இதெல்லாம் அவர் கடைசியில் செய்த காரியங்கள். எல்லாவற்றுக்கும் முதலாக அவர் பாடிய 'கனகதாரா ஸ்துதி'யும், இங்கே அம்பாள் கனகவிருஷ்டி பெய்திருப்பதும் அவர்களை ஒன்றாக முடிச்சுப் போடுகிறது என்று சொல்ல வந்தேன். பொன் மழை பெய்த அம்பாள், பொன் மழை பெய்வித்த ஆசார்யாள் இருவரும் சேர்ந்து விசேஷமாக சாந்நித்தியத்தை அநுக்கிரஹிக்கிற பெருமை காஞ்சிபுரத்தில் இருக்கிறது என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் நினைத்தேன்.

ஒரு வீட்டில் கனகதாரை வர்ஷிக்கச் செய்தார் ஆசாரியாள்; ஒரு நாட்டில் கனகதாரை வர்ஷித்தாள் அம்பாள். இருவரும் சேர்ந்திருக்கிற இந்த ஊரில் இந்தக் கனகாபிஷேகம் இப்போது நடக்கிறது.*

இதற்கு நான் ஏன் ஒப்புக் கொண்டேன்? ஒரு கிழப் பிராமணர் — எண்பது வயசானவர் — "உங்களுக்குக் கனகாபிஷேகம் பண்ணிப் பார்க்க வேண்டும் என்று ரொம்ப ஆசையாக இருக்கிறது. ஒப்புக் கொள்ள வேண்டும்" என்று ரொம்பவும் கேட்டுக் கொண்டார். நான் பேசாமலேயே இருந்து வந்தேன். "எனக்கு வயசாகிக் கொண்டே வருகிறது. நான் கண்ணை மூடுமுன் இந்தக் காட்சியைக் கண்ணால் பார்க்கிற புண்ணியத்தை அநுக்கிரஹிக்க வேண்டும்" என்று அவர் கேட்டுக் கொண்டேயிருந்தார். அபிமானம், பக்தி என்று வந்துவிட்டால் இப்படியெல்லாம் தோன்றும். அதனால்தான் அவரும் கேட்டார், நானும் பிடி கொடுக்காமலே இருந்து வந்தேன். அப்புறம் அவருக்குக் கண் பார்வை மங்கி மங்கி திருஷ்டி போய்விட்டது. இது ஒரு மாதிரி எனக்குச் சாதகமாயிற்று. "கனகாபிஷேகம் செய்து கண்ணால் பார்க்க வேண்டும் என்றீர்கள். உங்களுக்குத்தான் இப்போது திருஷ்டி போய்விட்டதே. இனி எப்படிப் பார்க்க முடியும்? எனவே இந்தக் காரியம் வேண்டாம்" என்று சொல்லிவிட்டேன். அவர் விட்டபாடாக இல்லை. "கண்ணுக்கு சிகித்ஸை பண்ணிக் கொள்வேன்" என்று புறப்பட்டார். எப்படியோ சிகித்ஸையினால் அவருக்கு மறுபடியும் பார்வை வந்து விட்டது. "பார்வை வந்துவிட்டது. பிரார்த்தனையை நிறைவேற்றணும்" என்று ரொம்பவும் உத்சாகத்தோடு வந்து வற்புறுத்தினார். அவருடைய ஆசையைப் பார்க்கிறபோது என்னாலே அதற்கு மேல் மறுக்க முடியவில்லை. வேறு வழியில்லை என்பதால் "ஆகட்டும்" என்று ஒப்புக் கொண்டேன்.

இம்மாதிரி கனகாபிஷேகம் பெறுவதற்குச் சொந்த ஹோதாவில் எந்த லாயக்கும் இல்லை; தற்காலம் தேசம் இருக்கப்பட்ட நிலையிலும் இது யுக்தமில்லைதான்.** ஆனாலும் அந்தக் கிழ பிராமணர் — அவர் மட்டுமில்லை, இன்னும் பலர் — காட்டுகிற அபிமானத்தைத் தட்ட முடியவில்லை; கட்டுப்பட வேண்டியதாயிற்று. **(தொடரும்)**

---

*ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களுக்கு 1957ல் பீடாரோஹண பொன் விழாவின் போது நடந்த கனகாபிஷேகம்.

** கனகாபிஷேகமான பொன் அனைத்தும் தர்மத்துக்கே அளிக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது. - ஆசிரியர்



# "பிராயச்சித்தம்"

அன்புமணி

'பின்ட்ராப் சைலன்ஸ்' என்பார்களே, அத்தகைய அமைதி நிலவியது அந்த 'மலர் விழி மகளிர் கல் லூரியில்'. தேங்கியுள்ள தெளிந்த நீரோடையில் எறியப்பட்ட கல் போல் இந்த அமைதியைக் கிழித்துக் கொண்டு கீதாவின் குரல் இறை வணக்கத்துக்கான பாடலைப் பாடிக் கொண்டிருந்தது. விளை யாட்டு மைதானத்தில் எல்லா வகுப்பின் மாணவிகளும், ஆசிரியைகளும் ஒன்றுகூடி, காலை இறை வணக்கத்தை முடித்த பின்பு தான் அவரவர்கள் தங்கள் தங்கள் வகுப் பறைக்குப் பிரிந்து செல்ல வேண்டும். இது அந்தக் கல்லூரியில் வழக்கமாக நடைபெறும் பழக்கங்களில் ஒன்று.

அன்றைய இறை வணக்கம் முடிந்தது. வகுப்புவாரியாக நின்று கொண்டிருந்த மாணவிகள் அனைவரும் வழக்கம் போல் தங்கள் வகுப்புக்குச்செல்ல ஆரம்பித்தார்கள்.

''எல்லோரும் அவரவர்கள் இடத்திலேயே நில்லுங்கள். நான் ஒன்றைப் பற்றி விசாரிக்க வேண்டும். அது பற்றிய உண்மை எனக்குத் தெரிந்தே ஆக வேண்டும்'' என்று தனக் குள்ள கோபத்தை குரலிலேயே உயர்த்திக் காண்பித்தாள் பிரின்ஸிபால். புருவத்தை உயர்த்தி, விழிகளை உருட்டி, கடுகடுப்பான முகத்துடன் மாணவிகளைச் சுற்றிப் பார்த்த விதத்திலேயே கல்லூரி பிரின்ஸ்பாலுக்கு உரிய தகுதி இந்தத் திருமதி காமாட்சி லட்சுமண னுக்கு உண்டு என்பதை எல்லோர் முன் னிலையிலும் நிரூபித்துக் கொண்டிருந்தாள்.

பிரின்ஸ்பாலின் கோபத்துக்குக் காரணம் என்னவாக இருக்கும் என்பதை ஒவ்வொரு மாணவியும், மற்ற மாணவியுடன் தனக்குத் தெரிந்த கற்பனையில் கயிற்றைத் திரித்துக் கொண்டிருந்த சத்தம், மாலையில் அடைக் கலம் நோக்கி மரங்கள் அடர்ந்து வளர்ந் திருக்கும் இடத்திலே பல இனத்தைச் சேர்ந்த பறவைகள் ஒன்றுகூடும் பொழுது உண்டாகக் கூடிய சப்தங்களைப் போல் இருந்தது.

அடுத்த சில விநாடிகளுக்குள் பிரின்ஸிபால் போட்ட 'சைலன்ஸ்' என்ற சப்தத்தால் அங்கு மீண்டும் ஆழ்ந்த அமைதி நிலவியது.

''பானுமதி பி.எஸ்ஸி. பௌதிகம். இரண் டாம் ஆண்டு. இங்கே வரவும்.''

பானுமதிக்கு உடல் வியர்த்தது. யாரும் பேசக்கூடாது என்று முதல்வி விதித்திருந்த தடையினால், அனைத்து மாணவிகளும் தம் அகத்தில் உள்ள உணர்ச்சிகளை முகத்தின்மூலம் வெளிப்படுத்திப் பானுமதியையே உற்று நோக்கினர். சுற்றி இருந்த மாணவிகளைப் பார்க்கத் தன் உள்ளுணர்வு வெட்கப்படுவது போல் குனிந்த தலை நிமிராமல் திருமதி பிரின்ஸ்பால் முன்னால் சென்று பானுமதி நின்றாள்.

''இதில் ஒன்றும் குறைச்சல் இல்லை. நான் சுற்றி வளைத்துப் பேச விரும்பவில்லை. இந்தக் காதல் கடிதத்தை எழுதியது நீதானே!''

''........ ........................''

''என்ன! ஒன்றும் தெரியாத ஊமையைப் போல் இருக்கின்றாய்! கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லத் தெரியாது.....? ம்.... சொல்....! எனக்கு நேரிடையான பதில் தேவை. எழுதியது நீதானே?''

''ஆ....மா....ம்.''

'' நான் நினைத்தது சரிதான். எனக்குத் தெரியும். அதனால்தான் உனக்கு டி. சி.

கொடுத்துக் கல்லூரியை விட்டு வெளியே அனுப்ப நான் முன்னமே முடிவு செய்து விட்டேன். இந்த ஒரு விஷயத்தில் மட்டும் நான் எந்தவித தயவு தாட்சண்யமும் காண்பிக்கமாட்டேன். இன்றிலிருந்து இந்தக் கல்லூரியில் உன் பெயர் நீக்கப்பட்டுவிட்டது. சரி..... நீ போகலாம்.''

''மேடம்.''

''நோ, எக்ஸ்க்யூஸ் பார் இஸ்.... எஸ்... யூ கேன் கோ !''

பானுமதிக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. விம்மிய குரலில், ''நான்... வருகிறேன்...... மேடம்!'' என்று கூறி, தலை நிமிர்ந்து மற்ற மாணவிகளைப் பார்க்க முடியாமல் இருந்த தன் நிலையை உணர்ந்து அந்த இடத்தைவிட்டு விரைந்து வீட்டை நோக்கி நடந்தாள்.

''..........!?........?!..........!!''

''சைலன்ஸ் ! நான் சொல்வதை எல்லோரும் கவனமாகக் கேளுங்கள். இப்படிக் காதல் கீதல் என்று அருகிலுள்ள அரசினர் கலைக் கல்லூரி மாணவர்களுடன் இது மாதிரி தகாத முறையில் நடந்து கொண்டீர்களானால், பானுமதிக்கு ஏற்பட்ட இதே கதி தான் உங்களுக்கும் ஏற்படும். உங்களை வீட்டுக்கு அனுப்புவதோடு மட்டும் அல்லாமல், உங்கள் பெற்றோர்களுக்கும் என்ன காரணத்துக்காக உங்கள் பெண் கல்லூரியை விட்டுத் துரத்தப்பட்டாள் என்பதையும் விவரமாக எழுதி அனுப்புவேன். இது எல்லோருக்கும் ஒரு பாடமாக இருக்கட்டும். கல்லூரி சட்ட திட்டத்துக்கு உட்பட்டுக் கல்லூரியின் மானத்தைக் காப்பாற்ற விருப்பம் உள்ளவர்களைத் தவிர மற்றவர்கள் இங்கு இருக்க வேண்டாம்... சரி, சரி! அவரவர்கள் வகுப்புக்குச் செல்லுங்கள்.''

அரசினர் கலைக் கல்லூரி மாணவர்களுடன் காதல் கடிதத் தொடர்பு கொண்டிருந்த வேறு சில மாணவிகளும், அகத்தில் உள்ள இந்த விஷயத்தைத் தம் முகம் எங்கு காட்டிக் கொடுத்து விடுமோ என்ற பயத்தினால் அப்பாவி போல் தங்கள் முகங்களை வைத்துக் கொண்டனர். இனி இந்தக் காதல் தொடர்பைத் துண்டித்து விட வேண்டும் என அவர்கள் உள்ளுணர்வு கூறியது.

தன் வகுப்பு மாணவி பானுமதியை இத்தனை மாணவிகள் முன்னிலையில் இப்படிப் பட்ட அவமானத்துக்கு உள்ளாக்கிய கல்லூரி முதல்வியைப் பார்த்து, ''நீயும் ஒரு பெண்தானா? உனக்கு இதயம் கல்லாலா செய்யப்பட்டிருக்கிறது?'' எனக் கேட்டால்தான் மல்லிகாவின் மனத்துக்கு அமைதி ஏற்படும் போல இருந்தது.

'இந்த வயதில் ஒரு பெண்ணுக்கு இது போன்ற சபலம் ஏற்படுவது இயற்கைதான். அதை அடக்கி வெற்றி சூடியிருக்க வேண்டும் இந்தப் பானுமதி. அந்தத் திறன் இல்லாததாலும், அனுபவ அறிவுக் குறைவின் காரணமாகவும் அவசரப்பட்டுப் பானு இந்தக் கடிதத்தை எழுதிவிட்டாள். தவறுதான். ஒப்புக் கொள்கிறேன். அதற்காக இத்தனை பெண்களின் மத்தியில் வைத்தா அவள் மானத்தை வாங்க வேண்டும்? இவள் (பிரின்ஸ்பால்)



# போட்டிக்கதை-20

பெண்ணா! அல்லது பேயா? கல்லூரி முதல்விக்கு உரிய அனுபவ முதிர்ச்சியே காணுமே! அந்தப் பெண்ணின் வாழ்வை எவ்வளவு சீக்கிரத்தில் பாலைவனமாக மாற்றி விட்டாள்?



## அதிசய அமைச்சர்!

டெல்லியிலிருந்து ஆக்ரா செல்லும் விமானத்தில் நாற்பது ஆஸ்திரேலிய உல்லாசப் பிரயாணிகளுக்கு சீட்டுகள் ரிசர்வ் செய்யப்பட்டிருந்தது. கடைசி நேரத்தில் மத்திய அமைச்சர் ஜார்ஜ், ஆக்ரா செல்ல வேண்டியிருந்ததால் அந்த நாற்பதில் மூன்று ஆசனங்கள் அமைச்சர் குழுவுக்கு தரப்பட்டு மூன்று பிரயாணிகள் ஆக்ராவுக்குக் காரில் அழைத்துச் செல்லப் பட்டனர். விமானம் கிளம்பிய பிறகு இந்த விஷயம் அமைச்சருக்குத் தெரிந்தது. உடனே அவர் ஒலி பெருக்கி மூலம் உல்லாசப் பயணிகளுக்கு ஏற்பட்ட அசௌகர்யத்துக்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, இதனால் இந்தியாவைப் பற்றித் தவறான அபிப்பிராயம் கொள்ள வேண்டாம் என்றும் கேட்டுக் கொண்டார். உல்லாசப் பயணிகள் மகிழ்வுற்றனர். இந்தப் பேச்சைப் பதிவு செய்து கொண்டனர். ரேடியோ ஆஸ்திரேலியா மூலம் ஆஸ்திரேலியா நாட்டு மக்களுக்கு ஒலிபரப்புவதாகவும் கூறினர். ஆக்ராவில் தம்மை வரவேற்கக் கொண்டு வந்த மாலைகளை அமைச்சர் அந்த ஆஸ்திரேலிய நாட்டவருக்குப் போடச் சொன்னார்! - ஹிந்துஸ்தான் டைம்ஸ் - பாலி

---

நீங்கள் செய்தது தவறு என்று பிரின்ஸ்பாலைப் பார்த்துக் கூறத்தான் போகிறேன். தனது இருப்பிடத்தை விட்டு வேகமாக எழுந்து நடந்தாள் மல்லிகா.

''மல்லிகா! உங்களுக்கு என்ன வேண்டும்?'' ஆபீஸ் சம்பந்தமான ஃபைலைப் புரட்டியவாறே பிரின்ஸ்பால் கேட்டாள்.

மல்லிகா தன் தொண்டையை ஒரு முறை இலேசாகக் கனைத்துக் கொண்டாள். தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, ''நீங்கள் பானுமதியை அத்தனை மாணவிகள் மத்தியில் அவமானப்படுத்தியது தவறு. தாங்கள் தனியாகக் கூப்பிட்டு அவளைக் கண்டித்திருக்கலாம். அந்தப் பெண்ணின் வாழ்வையே தங்கள் அவசர முடிவினால் கெடுத்துவிட்டீர்கள் என்பது என் அபிப்பிராயம்'' என்று துணிந்து சொல்லி விட்டாள். தான் கூறி விட்டதை எண்ணி ஒருபுறம் பெருமிதம் கொண்டாலும் மறுபுறம் அடுத்து நடப்பது என்னவோ என்ற பயமும் அவள் மனத்தைக் கவ்வத்தான் செய்தது.

ஃபைலைப் பார்வையிட்டுக் கொண்டிருந்த பிரின்ஸ்பால் ஒன்றும் பேசவில்லை. அங்கே சிறிது நேரம் அமைதி நிலவியது. பதில் இல்லாமையைக் கண்ட மல்லிகா அந்த இடத்தை விட்டு நகர ஆரம்பித்தாள்.

''மல்லிகா! இப்படி வாருங்கள், இப்படி அமருங்கள்!''

பிரின்ஸ்பால் தன்னை வேலையை விட்டு நீக்கி விட்டது போலவும், தான் வீட்டில் அமர்ந்துகொண்டு என்ன செய்வது என்று புரியாமல் தவிப்பது போலவும் அந்த விநாடிக்குள் மல்லிகா கற்பனை செய்து விட்டாள். பிரின்ஸ்பாலின் நாற்காலிக்கு எதிரில் தயங்கியபடியே அமர்ந்து கொண்டாள்.

''மல்லிகா! உங்களுக்கு ஒன்று தெரியுமா? பானுவை அந்தக் காதல் கடிதத்தை எழுதும்படி கூறியதே நான்தான்.''

''என்ன?''

''ஆமாம். நமது கல்லூரியில் சில மாணவிகள் அருகில் உள்ள அரசினர் கலைக் கல்லூரி மாணவர்களுடன் காதல், கீதல் என்று கடிதத் தொடர்பு கொண்டிருப்பதாகவும் 'செக்ஸ்' சம்பந்தமான புத்தகங்களை அங்கிருந்து பலர் மூலமாக வாங்கிக் கல்லூரி விடுதியில் படிப்பதாகவும் நம்பத் தகுந்த இடங்களிலிருந்து புகார்கள் வந்தன. தகுந்த ஆதாரத்துடன் அந்த மாணவிகளைப் பிடித்துக் கண்டிக்க முடியவில்லை. இப்படியே விட்டு விட்டால் இளமை உணர்வு கொண்ட மற்ற மாணவிகளையும் இந்தச் சில மாணவிகள் கெடுத்து விடுவார்கள் என்ற பயம். அதே நேரத்தில் நம் கல்லூரியின் பெயரையும், பண்பாட்டையும் காக்க வேண்டிய என் கடமையையும் உணர்ந்து, பானுவை அழைத்து இவற்றையெல்லாம் கூறினேன். அவளுடைய ஒத்துழைப்பைக் கோரினேன். 'நீ ஒரு அரசினர் கல்லூரி மாணவனுக்குக் காதல் கடிதம் ஒன்று எழுதி, உன் பாடப்புத்தகத்தில் வைத்து எனக்கு அதைத் தர வேண்டும்' என்றேன். மேலும் அதனால் ஏற்படும் விளைவுகளைப் பற்றியும் கூறினேன்.''

''அதற்குப் பானுமதி சம்மதம் தெரிவித்தாளா? உங்கள் திட்டத்துக்கு அவள் ஒப்புக் கொண்டாளா?''

''சிறிது நேர யோசனைக்குப் பின் பானுமதி மனப்பூர்வமாகச் சம்மதித்தாள். திசை காட்டும் கருவியில்லாக் கப்பல் முடிவில் பாறையிலோ அல்லது புயல் காற்றிலோ சிக்கித்தான் நொறுங்க நேரிடும். இளமையிலே ஏற்படக் கூடிய உணர்வுகளும் திசை காட்டும் கருவி இல்லாக் கப்பலைப் போலத்தான் போக விரும்பும். திசையறிந்து அந்தக் குறிப்பிட்ட பகுதியில் செலுத்துவது சற்றுக் கடினமாக இருந்தாலும், அந்த முறையில் தான் கரையை அடைய முடியும். இதைக் காலம் கடந்து புரிந்துகொள்வதில் பயனில்லையே! இதைத் தன் அறிவுக்கு எட்டியவரை பானுமதி சிந்தித்திருக்க வேண்டும். எனவே தான் அந்தப் புத்திசாலிப் பெண் இந்தத் தியாகத் தழும்பை ஏற்றுக் கொண்டாள்.''

''இந்தப் பொறுப்பை உணர்ந்த தாங்கள் பானுமதியின் வாழ்வைப் பற்றிக் கொஞ்சம் கூடச் சிந்திக்கவில்லையே. இனி அவளை மணந்துகொள்ள யார் முன்வருவார்கள்?''

''அந்தக் கவலையே தங்களுக்கு வேண்டாம். நான் பானுமதியை என் மருமகளாக ஏற்றுக் கொண்டு விட்டேன். என் மூத்த மகன் பி. ஈ. படித்துவிட்டு பாய்லர் தொழிற்சாலையில் அஸிஸ்டெண்ட் என்ஜினீயராகப் பணி புரிவது உங்களுக்குத் தெரியும். அவனுக்கும் பானுமதிக்கும் அடுத்த வாரம் திங்கட்கிழமை திருமணம். அந்தக் கல்யாணத்துக்கு அவசியம் நீங்கள் வரவேண்டும்'' என்று பிரின்ஸ்பால் பணிவாகக் கூறிவிட்டு, தான் பாடம் நடத்தவிருக்கும் வகுப்பு அறையை நோக்கி நடந்தாள்.

மல்லிகா கண்களில் நீர் ததும்பியது.

## கண்களை ஒருபோதும் கசக்க வேண்டாம்..







# கரிக்கும் கண்களுக்குத் தேவை வைஸின்

கரித்தாலும், களைப்படைந்தாலும், கூசினாலும் கண்களைக் கசக்காதீர்கள். சிவந்த கண்களை நிமிட நேரத்தில் இதமுடன் தெளிவாக்கு-வதற்கு வைஸின் இருக்கிறது. வைஸின் உபயோகியுங்கள். கண்கண்ட பலனை உலகெங்கும் உணர்த்தியுள்ளது வைஸின். அது வன்மை வாய்ந்தது, எனினும் மென்மை கனிந்தது.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

**சில்லறை விலை ரூ. 2.97**
(தல வரிகள் தனி.)




**60 வினாடிப் பரிட்சை**

இந்த எளிய வைஸின் பரிட்சையை ஏற்றுப் பாருங்கள். சிவந்த ஒரு கண்ணிலே இரு சொட்டு வைஸின் விட்டுக் கொள்ளுங்கள். ஒரு நிமிடம் கழித்துக் காண்பீர்கள் அத்தாட்சி —ஒரு விழியில் சிவப்பு, மறு விழியில் தெளிவு. (இனி, சிவந்த விழியிலும் வைஸின் இட்டு தெளிவாக்குங்களேன். கண் சிவப்போ, கரிப்போ நீடித்தால், டாக்டரிடம் ஆலோசனை கேளுங்கள்).

# வைஸின்

**களைத்திய கண்களிலே கதிரொளி பாய்வது வைஸின்**

Pfizer ∴ பைஸர் தயாரிப்பு: "உலக நலனை நாடும் விஞ்ஞானம்"

Pfizer

# பம்பாய் டெஸ்டைப் பாரெல்லாம் நோக்கும்!



நவாப் பதவி பறிபோனாலும் கிரிக்கெட் மன்னரின் புகழ் பறிபோகவில்லை! கல்கத்தா டெஸ்டிலும், சென்னை டெஸ்டிலும் மகத்தான வெற்றிகளைச் சம்பாதித்து, ரசிகர்களின் ஆசையைப் பூர்த்தி செய்திருக்கிறார், பட்டோடி. பம்பாய் டெஸ்டுக்கு முக்கியத்துவம் ஏற்பட்டுவிட்டது. உலகின் கண்கள் பம்பாய் நோக்கித் திரும்பியிருக்கும்.



■ வாமன உருவ அந்தணச் சிறுவன், பலியிடம் இரண்டடி அளந்து, மூன்றாவது 'அடி'க்கு 'இடம்' கேட்டதைப் போல் கல்கத்தா, சென்னை இரண்டு இடங்களில் 'வெற்றி'களைத் தமது பாட்டிங் திறத்தால் அளந்த 'வாமன' விசுவநாதன் மூன்றாவது அடிக்கு பம்பாய் மைதானத்தை நாடுகிறார். சேப்பாக்க சிதம்பரம் ஸ்டேடியக் கதாநாயகன் விசுவநாதனே! முதல் இன்னிங்ஸில் 228 நிமிஷங்களில் 194 பந்துகளைப் பல கோணங்களில் பதினைன்கு பவுண்டரிகளாகவும், ரன்களாகவும் குவித்து விசுவநாதன் விசுவரூபமெடுத்து ஆடினார். 'உபகதாநாயகன் இடத்தைப் பெறுபவர் கெய்க்வாட்! 80 ரன்கள் குவித்தது வெற்றிக்குப் பெரிதும் உதவியது.'

■ ஏழைக் குடும்பத்தில் ஆறு குழந்தைகளுக்கு நடுவில் நான்காவது குழந்தையாகப் பிறந்தவர் ஸோல்கர். பம்பாய் பி. ஜே. ஹிந்து ஜிம்கானா இரௌண்ட்ஸ்மனின் புதல்வர். பந்தைப் பொறுக்கிப் போடுவதில் ஆரம்பித்து இன்று டெஸ்ட் ஆட்டக்காரராய் விளங்குகிறார். டெஸ்ட்களில் வாடேகரின் 46 காட்ச் சாதனையை ஸோல்கர் முறியடித்திருக்



- தமிழக கிரிக்கெட் சங்கத் தலைவர் திரு எம். ஏ. சிதம்பரம்.
- பௌலிங்கிலும் வெற்றி தேடித்தந்த மும் மூர்த்திகள்.
- பிரசன்னாவின் பௌலிங் சாதனை.
- கிளாஸிக் பாட்டிங் செய்த விஸ்வநாத்.
- காப்டன் லாயிட் ஆடுகிறார்!







- இந்தியக் கோட்டையைக் காத்த கெய்க்வாட்.
- கிரிக்கெட் சங்கக் காரிய தரிசி ஸ்ரீராமன்.
- காளிசரண் தோல்வியைத் தடுக்கப் பெரு முயற்சி செய்தார்!
- ரிச்சர்ட்ஸ் விக்கெட்டைக் 'காட்ச்' பிடித்தார் இன்ஜினியர்.



கிறார். இந்தியாவின் வெற்றிக்கு ஸோல்கரின் 'காட்ச்' திருப்பு முனை.

■ பிரஸன்னா பெங்களூரில் பிறந்தாரே யொழிய அவரது பெரிய சாதனைகள் சென்னையில்தான் நிகழ்ந்துள்ளன. 1961–62ல் டெக்ஸ்டர் கோஷ்டிக்கு எதிராக முதல் டெஸ்ட் விக்கெட்டை பிரஸன்னா எடுத்தது சென்னையில்தான்! 1969–70ல் ஆஸ்திரேலிய கோஷ்டிக்கு எதிராக 10 விக்கெட்களை எடுத்துப் பிரசித்தமானதும் சென்னையில்தான்! இதே சென்னையில்தான் பிரஸன்னா குப்தேயின் முப்பத்தாறு டெஸ்ட்களில் 149 விக்கெட்களைக் கடந்து புது ரிகார்டு ஏற்படுத்தும் பாக்கியம் பெற்றிருக்கிறார். இந்த மாட்சில் ஒன்பது விக்கெட்களை வீழ்த்தியுள்ளார். அவர் மனைவி ஸிமாவுக்கு ஒரே குஷி! 'கல்கி'யில் தம் அருமைக் குழந்தையின் படத்தைப் பார்த்து மகிழ்ந்த ஸிமா, "உன் குறை தீரணும்னா உனக்கும் ஒண்ணு பிறக்கணும்! உன் கணவரது குறையும் தீரும்!" என்று சொல்லி மார்ஷனில் கவாஸ்கரின் கன்னத்தைக் கிள்ளினாள்!

■ இந்திய பாட்ஸ்மனின் பரிதாப வீழ்ச்சிக்கு 'ஆண்டி' ராபர்ட்ஸின் பயங்கரப் பந்து வீச்சே காரணம்! இரண்டு இன்னிங்ஸிலும் பன்னிரண்டு விக்கெட்களை 41.9 ஓவர்களில் 121 ரன்களிலே எடுத்த புண்ணியவான் இந்த 'ஆண்டி' ராபர்ட்ஸ்! இவர் வெஸ்லி ஹாலின் ரிகார்டை முறியடித்திருக்கிறார்! இவரது இரண்டு ஸிக்ஸர்களும் கடைசி பாட்ஸ்மனின் முதல் 'தர சாதனை'!

■ மும்மூர்த்திகளான பேடி, பிரஸன்னா, சந்திரசேகர் இந்த நான்காவது டெஸ்டில் மேற்கிந்தியக் கோஷ்டியினரின் விக்கெட்டுகளை அழித்தார்கள், இந்திய கோஷ்டியின் மானத்தைக் காத்தார்கள், புதிய சாதனைகளை உருவாக்கினார்கள். காப்டன் லாயிடே அலுத்துச் சலித்துக் கொள்ளும்படி இம் மும்மூர்த்திகளும் பந்து வீசினார்கள்!

ஆஸ்திரேலியாவுக்கு அகில உலகக் கோஷ்டியின் பதினொரு ஆட்டக்காரர்களில் ஒருவராகச் சென்ற பேடியை ஒரு பெண் பத்திரிகை நிருபர் பேட்டி கண்டார்: "ஆஸ்திரேலியர்கள் உங்கள் ஆட்டத்தால் கவரப்படுவதன் இரகசியம் என்ன?"

பேடியின் பதில்: "எல்லோருக்குமே மாறுதலில் ஈடுபாடு அதிகம். எனது மாறுதலான தோற்றமே கவர்ச்சிக்குக் காரணமாக இருந்திருக்கலாம்!"

ஆஸ்திரேலிய ரசிகர்கள் பேடியின் ஆட்டத்தில் மனத்தைப் பறிகொடுத்தார்கள். ஆஸ்திரேலியப் பெண் ஒருத்தி பேடியிடமே மனத்தைப் பறிகொடுத்து அவரது பந்து வீசும் கரத்தைப் பற்றியிருக்கிறாள்!

■ டெஸ்ட் ஆட்டம் முன்னேறிக் கொண்டிருந்தது.

"அப்பா! உங்களை உடனே அம்மா வீட்டுக்கு வரச் சொன்னாங்க! பாட்டி போய் விட்டாளாம்!"

"மகனே! பொய் சொல்லி என்னை அனுப்பி விட்டு இந்த இடத்தில் நீ உட்காரப் பார்க்கிறாய்! காப்டன் லாயிட் ஆட்டம் காணத் துடித்தாயே! அவரை ஏழு ரன்களில் இன்ஜினியர் 'ஸ்டம்பு' 'அவுட்' செய்துவிட்டார்! நீ போய் வரலாம்!"

■ தொழில் வர்த்தகத் துறைகளில் அபார சாதனையைப் புரிந்துள்ள திரு எம். ஏ. சிதம்பரம் பொதுப் பணிகளிலும் கருத்து கொண்டு எத்தனையோ நல்ல காரியங்களுக்கு உதவியிருக்கிறார். அதன் பொருட்டுத்தான் அண்மையில் ரோட்டரி சங்கம் அவருக்கு For the Sake of Honour Award வழங்கிக் கௌரவித்தது. திரு சிதம்பரத்தின் சாதனைகள் பலவற்றுள் அனைவரும் காண நிற்கும் பெரும் சாதனை கிரிக்கெட் ஸ்டேடியம். அதற்கு அவரது பெயரையே சூட்டக் கிரிக்கெட் சங்கம் முடிவு செய்தது மிகவும் பொருத்தம்.

■ இந்தியாவில் முதல் தடவையாக ஒரு கிரிக்கெட் சங்கம் பிரும்மாண்டமான ஸ்டேடியம் எழுப்பும் பெருமையைப் பெறுகிறது. சேப்பாக்கம் சிதம்பரம் ஸ்டேடியத்தின் அமைப்பை வரைந்தவர்கள் பித்தவடியான் சகோதரர்கள். பிரும்மாண்டமான தூண்கள் கூரையைத் தாங்க மாடி போன்ற அமைப்பும் கொண்ட சிதம்பரம் ஸ்டேடியத்தில் 35,000 பேர் வசதியாக அமர்ந்து ஆட்டம் காணலாம். இந்த மாட்சின் போது முந்நூறு வாலண்டியர்கள் ரசிகர்களுக்குப் பலவிதங்களில் உதவினர்.

ஆட்டத்தின் வெற்றி இருக்கட்டும், அது நடத்தப்பட்ட விதமும் வெற்றிகரமாக அமையப் பெரு முயற்சி எடுத்துக் கொண்டனர், தமிழகக் கிரிக்கெட் சங்கத்தின் தலைவர் எம். ஏ. சிதம்பரமும், காரியதரிசி ஸ்ரீராமும். எந்தவித அசம்பாவிதமும், போக்குவரத்து நெரிசலும் ஏற்படாதிருக்கப் போலீஸ் நிர்வாகம் கண்ணும் கருத்துமாகப் பாடுபட்டது.

■ சிதம்பரம் ஸ்டேடியத்தில் அம்பயர்களின் 'தீர்ப்பு' சர்ச்சைக்குள்ளாகியது! நாம் அம்பயர்களைப் பற்றி விமர்சிப்பது சரியல்ல. ஆனால் ஒரு ஜோக் சொல்லலாமே! மேற்கிந்தியத் தீவு டோனி கோஸியர் கூறிய ரசமான துணுக்கு இது:

கியானா கௌண்டி மைதான பெவிலியனில் ஆட்டக்காரர்கள் அறைக்கு அடுத்தாற் போல் அம்பயர்கள் அறை. அம்பயர்கள் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொண்டது காதில் விழுந்தது.

ஓர் அம்பயர்: இன்று நான் ரொம்ப சிரமப்பட்டுக் களைத்துப் போனேன்.

அடுத்த அம்பயர்: அப்படியா? ஏன்?

முதல் அம்பயர்: பாருங்களேன்; லாயிட் காளிசரண் போன்ற ஐந்து அபார ஆட்டக்காரர்களின் விக்கெட்களை நானே எடுத்திருக்கிறேன்!

— குண்டுமணி

# சிவகாமியின் சபதம்

## நாற்பத்தோராம் அத்தியாயம்

## அஜந்தா குகையில்



புலிகேசியின் உணர்ச்சி மிகுதியையோ கண்ணீரையோ, கவனியாதவராய்ப் புத்தபிக்ஷு கீழ்வானத்தில் மிதந்து வந்த பூரண சந்திரனைப் பார்த்துக் கொண்டே மேலும் கூறினார்:

"அந்தக் கிராதகர்கள் என்னை நீ என்றே எண்ணிக் கொண்டு பிடித்துப் போனார்கள். வனப் பிரதேசங்களையெல்லாம் தாண்டி அப்பால் கொண்டு போனதும் என்னைக் குதிரை மேல் ஏறச் சொன்னார்கள். நான் குதிரை ஏறத் தெரியாமல் தவித்ததைப் பார்த்ததும் அவர்களுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. நான் பாசாங்கு செய்கிறேனோ என்று அவர்கள் முதலில் எண்ணினார்கள்.. பிறகு உண்மையாகவே எனக்குக் குதிரை ஏறத் தெரியவில்லை என்று அறிந்ததும் அவர்களுடைய தலைவன் என்ன என்னவெல்லாமோ கேள்விகள் கேட்டான். என்னுடைய விடைகளைக் கேட்டு அவர்கள் திகைத்தார்கள். உன்னுடைய காதுகளில் நீ குண்டலம் போட்டுக் கொண்டிருந்தாய். அதற்காகத் துவாரங்களும் இருந்தன. என் காதுகளில் துவாரமே இல்லை என்பதைப் பார்த்ததும் அவர்களுக்கு நான் நீ இல்லை என்பது நிச்சயமாய்த் தெரிந்து விட்டது. உன்னைப் பிடிக்க முடியாததனால் ஏற்பட்ட கோபத்தையெல்லாம் என் பேரில் காட்டி உபத்திரவப்படுத்தினார்கள். ஆ! அவர்கள் அப்போது சாட்டையினால் என்னை அடித்த அடியின் தழும்புகள் இதோ இன்னும் இருக்கின்றன!" என்று புத்தபிக்ஷு தம் முதுகைத் தொட்டுப் பார்த்துக் 'கொண்டார்.

"ஐயோ! அண்ணா! அந்தத் தழும்புகளைப் பார்த்து எத்தனையோ நாள் நான் தூக்கமின்றித் தவித்திருக்கிறேன். ஆனால் அதையெல்லாம் எதற்காக இப்போது ஞாபகப்படுத்துகிறாய்?" என்று புலிகேசி அலறினார்.



"தம்பி! உனக்கு ஞாபகப்படுத்தவில்லை. எனக்கு நானே ஞாபகப்படுத்திக் கொள்கிறேன். அதையெல்லாம் இன்றைக்கு எண்ணிப் பார்த்தால் எனக்கு மனக் கஷ்டம் உண்டாகவில்லை. குதூகலந்தான் உண்டாகிறது. பரோபகாரம் செய்வதில் உள்ள பலன் இதுதான். ஒருவருக்கு ஒத்தாசை செய்வதற்காக நாம் கஷ்டப்பட்டோமானால், கஷ்டம் அதை அநுபவிக்கும்போது மட்டுமே நீடிக்கிறது. சீக்கிரத்தில் அது போய்விடுகிறது. அப்புறம் வாழ்நாள் உள்ளவரை நாம் செய்த உதவியை நினைத்து நினைத்துச் சந்தோஷப்படுகிறோம். ஆனால், தம்பி! அந்தப் பழைய கதையை யெல்லாம் இப்போது ஞாபகப்படுத்துவது உனக்கு ஒருவேளை மனக்

அமரர் கல்கி



கஷ்டத்தை உண்டாக்கினல் நான் சொல்லவில்லை'' என்று நாகநந்தி நிறுத்தினர்.

''அண்ணு, என்ன சொல்கிறய்? எனக்கும் அந்தக் காலத்தை நினைத்தால் எத்தனையோ மகிழ்ச்சி உண்டாகிறது!''

''அப்படியானல் சரி. கொஞ்சநேரம் வரையில் அந்தக் கிராதகர்கள் துன்புறுத்தியதெல்லாம் பொறுத்துக் கொண்டிருந்தேன். பொறுக்க முடியாமற் போன பிறகு, நான் அஜந்தா புத்த சங்கராமத்தைச் சேர்ந்தவன் என்று தெரிவித்தேன். உடனே அவர்கள் பயந்து விட்டார்கள். நான் அணிந்திருந்த உடைகள் எப்படிக் கிடைத்தன என்று கேட்டார்கள். பொய்கைக் கரையிலே அவை கிடைத்தனவென்றும், நான் அவற்றை வெறுமனே உடுத்திக் கொண்டு பார்க்க ஆசைப்பட்டு உடுத்திக் கொண்டதாகவும் சொன்னேன். என்னை அழைத்துக் கொண்டு திரும்பி அதே பொய்கைக் கரைக்கு வந்தார்கள். சுற்றியிருந்த வனப் பிரதேசமெங்கும் தேடிப் பார்த்தார்கள். கடைசியில் ஏதோ காட்டு மிருகம் உன்னைக் கொன்று தின்றிருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு என்னை விட்டு விட்டுத் திரும்பிப் போய்ச் சேர்ந்தார்கள். பிறகு, நீ வழி கண்டுபிடித்துப் பத்திரமாய்ப்

போய்ச் சேர்ந்தாயோ என்னவோ என்ற கவலையுடன் நானும் அஜந்தாவை நோக்கிக் கிளம்பினேன்.''

வாதாபிச் சக்கரவர்த்தி அப்போது குறுக்கிட்டுக் கூறினார்: ''நீ சொல்லியிருந்த படியே நான் நதி வழியைப் பிடித்துக் கொண்டு போனேன். வளைந்து வளைந்து போன தோடு எத்தனை தூரம் போனாலும் மனித சஞ்சாரமே இல்லை. அடிக்கடி எதிரே சுவர் வைத்தது போல் மலை நின்று அப்பால் வழியே இல்லை என்று தோன்றியது. போகப் போக இப்படியே இருந்தது. ஒருவேளை நீ சொன்னதை நான் நன்றாய்த் தெரிந்து கொள்ளாமல் தப்பான வழியைப் பிடித்துக்கொண்டு போகிறேனோ என்று எண்ணினேன். அதைவிடப் பயங்கரமான எண்ணம் ஒன்று தோன்றியது. நீ ஒருவேளை என்னை ஏமாற்றிவிட்டாயோ, சித்தப்பன் மங்களேசனிடம் போய்ச் சமாதானம் செய்து கொண்டு இராஜ்யம் ஆளப் பார்க்கிறாயோ என்று நினைத்தேன். கடைசியில் அஜந்தாவின் அற்புதச் சித்திரக் குகைகளை அடைந்தேன். நீ சொன்னபடியே அங்கு யாரோடும் பேச்சுக் கொடாமல் சிற்பியின் சீடனாக நடித்துக் காலம் கழித்துக் கொண்டிருந்தேன். ஒரு வாரம் கழித்து நீ வந்து சேர்ந்தாய். உன்னுடைய கதையைக் கேட்டு, உன்னுடைய முதுகிலிருந்த காயங்களையும் பார்த்து விட்டு, உனக்கு நான் மனத்தினால் செய்த அநீதியை எண்ணி 'ஓ' வென்று அழுதேன்....''

''தம்பி! என் விஷயத்தில் உன்னுடைய மனம் அப்போதுகூட முழு நிம்மதி அடையவில்லை. சங்கராமத்தின் தலைமை பிக்ஷு நம்மை ஒருநாள் சேர்ந்தாற்போல் பார்த்து விட்டார். நாம் நதியில் தனி இடத்துக்குச் சென்று குளித்துக் கொண்டிருந்தபோது அவர் பார்த்தார். உன்னைப் பற்றி விசாரித்தார். நான் உண்மையைச் சொன்னேன். அஜந்தா சட்டத்துக்கு நேர்விரோதமாக அந்நியனாகிய உன்னை நான் அங்கே கொண்டு வந்ததற்காக என்னை எவ்விதம் தண்டிப்பாரோ என்று பயந்தேன். ஆனால், குரு என்னைக் கோபிக்கவும் இல்லை; தண்டிக்கவும் இல்லை. அன்று சாயங்காலம் அவருடைய தலைமை விஹாரத்தில், ஒருவரும் வராத சமயத்தில் நம்மை அழைத்து வைத்துக் கொண்டு நம்மைப் பற்றிய கதையைச் சொன்னார். அதைக் கேட்ட பிறகு உன்னுடைய மன நிம்மதி இன்னும் அதிகமாகக் குலைந்தது. தம்பி! என் விஷயமாக உன் உள்ளத்தில்

பொறாமைத் தீ மூண்டு வரவரப் பெரிதாகிக் கொழுந்துவிட்டெரியத் தொடங்கியது.''

''ஆம், அண்ணா! அது உண்மைதான். ஆனால் அதே சமயத்தில் 'என்னுடைய நீச குணத்தைப் பற்றியும் நான் அடிக்கடி எண்ணமிட்டு வெட்கம் அடைந்தேன்.''

''உன் பேரில் தவறில்லை, தம்பி! சிறிதும் தவறில்லை. அப்போதும் நான் அவ்வாறுதான் எண்ணினேன். நீயும் நானும் இரட்டைப் பிள்ளைகள் என்றும், இரண்டு பேரில் நான் முதலில் பிறந்தவன் என்றும் தலைமை பிக்ஷு நமக்குத் தெரியப்படுத்தினார். 'நம் தந்தை நான் பிறந்தவுடனேயே என்னை அப்புறப்படுத்தி வைத்திருந்து ஐந்தா



வது வயதில் என்னை பிக்ஷுவிடம் ஒப்புவித்தார். உன்னுடைய உயிருக்கு ஏதாவது அபாயம் நேர்ந்ததாகத் தெரிந்தால், அப்போது மட்டும் என்னைப் பற்றிய இரகசியத்தை வெளிப்படுத்தி என்னை இராஜ்யத்துக்கு உரியவனாகச் செய்ய வேண்டும் என்று சொல்லியிருந்தார். இதையெல்லாம் பிக்ஷு குரு நமக்குச் சொல்லி, உன்னை நானே காப்பாற்றும்படியாக நேர்ந்த விதியைக் குறித்து வியந்தார். என்னுடைய உத்தம குணத்தை வெகுவாகச் சிலாகித்தார். நான் பிறந்து அரை நாழிகைக்குப் பிறகு நீ பிறந்ததாகவும், ஜாதக ரீதியாக, நீயே இராஜ்யமாளப் பிறந்தவன் என்று ஏற்பட்டபடியால் நம் தந்தை உன்னைச் சிம்மாசனத்துக்கு உரியவனாகத் தேர்ந்தெடுத்ததாகவும் கூறினார். இது தெரிந்ததும் உன் பேரில் எனக்கு ஏற்கனவே இருந்த அன்பு பன்மடங்கு ஆயிற்று. ஆனால், அதே செய்தியினால் உன்னுடைய மனத்தில் விஷம் பாய்ந்துவிட்டது. அந்த நிமிஷம் முதல் நீ என்னை மனத்துக்குள் துவேஷிக்கத் தொடங்கினாய். அதைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை; உன் பேரில் கோபம் கொள்ளவும் இல்லை. நியாயமாக வாதாபிப் பட்டத்துக்கு உரியவன் நான் என்று ஏற்பட்டபடியால் நீ என் பேரில் சந்தேகப்படுவது இயற்கை என்பதை உணர்ந்தேன். உன்னுடைய சந்தேகத்தை அறவே போக்கத் தீர்மானித்தேன். பிக்ஷு குருவின் காலில் விழுந்து என்னையும் பிக்ஷு மண்டலத்தில் சேர்த்துக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டேன். குரு முதலில் ஆட்சேபித்தார். கடைசியில் ஒப்புக் கொண்டார். உன்னுடைய முன்னிலையில் நான் தலையை மொட்டை அடித்துக் கொண்டு காவி வஸ்திரம் தரித்துப் புத்தபிக்ஷு ஆனேன். என்றென்றைக்கும் உலக வாழ்க்கையைத் துறந்துவிட்டதாகச் சத்தியம் செய்தேன். உன் உள்ளத்தில் மூண்டிருந்த தீ அணைந்தது. முன் போல் என்னிடம் அன்பும் விசுவாசமும் கொண்டாய்.''

''அண்ணா! அது முதல் உன்னையே நான் தெய்வமாகக் கொண்டேன். எந்தக் காரியத்திலும் உன் இஷ்டப்படியே நடந்து வந்தேன். நீ சொன்ன சொல்லைத் தட்டி நடந்ததில்லை.''

''அதனால் நீ எவ்வித நஷ்டமும் அடையவில்லை, தம்பி! உன்னை அஜந்தாவில் விட்டு விட்டு நான் வெளியேறினேன். மூன்று வருஷ காலம் நாடெங்கும் சுற்றினேன். இராஜ்யத்தின் அதிகாரிகள், இராணுவத் தலைவர்கள் எல்லாரையும் உன்னுடைய கட்சியில் சேரச் செய்தேன். பொதுஜனங்களையும் மங்களேசனுக்கு எதிராகக் கிளப்பிவிட்டுக் கொண்டிருந்தேன். பக்குவமான காலம் வந்த போது உன்னை அஜந்தாவிலிருந்து வரவழைத்தேன். பெரிய சைனியத்துக்குத் தலைமை வகித்து நீ வாதாபி நோக்கிச் சென்றாய். மங்களேசன் போரில் உயிரை விட்டான். நம்முடைய புகழ்பெற்ற பாட்டனார் சத்யாச்ரயப் புலிகேசி வீற்றிருந்து ஆட்சி புரிந்த சளுக்க சிம்மாசனத்தில் நீ ஏறினாய்.''

''அண்ணா! உன்னுடைய ஒத்தாசையினாலேதான் வாதாபிச் சிம்மாசனம் ஏறினேன். உனக்கு நியாயமாக உரிய சிம்மாசனத்தை நீ எனக்காகத் துறந்தாய்., என் மனத்தில் சிறிதும் களங்கம் இருக்கக் கூடாது என்பதற்காக உலக

# பொங்குக மங்களம்

சாரதாஸ் பஞ்சாதனம் 4

கோடி சூரியன்கள் சேர்ந்தாலும்
அளவிட முடியாத பிரகாசத்தை
உடையதும் ஆயிரம் சந்திரன்களின்
அழகை தோற்கடிக்கச் செய்வதாகவும்
உள்ள சாரதாஸின் பட்டுப்புடவையில்
விளங்கும் உன் சௌந்தர்யத்தை
இந்த உலகம் பரவசத்துடன்
போற்றுகிறது.



# சாரதா'ஸ்

N. S. B. ரோடு. திருச்சி-620002
போன் : 7077

தன் பில்டிங்ஸ், மவுண்ட் ரோடு.
சென்னை-600002 போன் : 87177

வாழ்க்கையையே துறந்து பிக்ஷு ஆனாய். உன்னுடைய மகத்தான பிரயத்தனங்களினாலேதான் மங்களேச னைக் கொன்று நான் சிம்மாசனம் ஏறி னேன். அதற்குப் பிறகு, இருபது வருஷ காலம் நீ எனக்கு அன்னை, தந்தையாக வும், மதி மந்திரியாகவும், இராணுவ தந்திரியாகவும் இருந்து வந்திருக்கிறாய். இன்று நர்மதையிலிருந்து வடபெண்ணை வரையில் வராகக் கொடி பறந்து வருவதெல்லாம் உன்னாலேதான். இதை யெல்லாம் நான் ஒப்புக் கொள்கிறேன். ஒப்புக்கொண்டு உனக்கு நன்றி செலுத்து கிறேன். ஆனால், இந்தப் பழைய கதையையெல்லாம் எதற்காக இப்போது ஞாபகப்படுத்துகிறாய்? உன்னிடம் எனக் குள்ள நன்றியை எந்தவிதத்திலாவது நான் தெரிவித்துக் கொள்ள இடமிருக் கிறதா?'' என்று புலிகேசி கேட்டு விட்டு ஆவலுடன் நாகநந்தியின் முகத்தை நிலா வெளிச்சத்திலே பார்த் தார்.

கடுமையான விரதங்களினால் வற்றி உலர்ந்திருந்த பிக்ஷுவின் முகத்தில் புலி கேசி என்றும் காணாத கனிவு தென் பட்டது.

''ஆம்; தம்பி! நான் உனக்குச் செய் திருப்பதற்கெல்லாம் பிரதியாக நீ எனக் குச் செய்யக் கூடியது ஒன்று இருக் கிறது'' என்றார் பிக்ஷு.

''அப்படியானால் உடனே அதைச் சொல்லு. இருபத்தைந்து வருஷமாக உனக்கு நான் பட்டிருக்கும் நன்றிக்கட னில் ஒரு பகுதியையாவது கழிக் கிறேன்.''

''தம்பி! நீ வாதாபியை விட்டுப் புறப்படுவதற்கு முன்பே உனக்கு ஓர் ஓலை அனுப்பியிருந்தேனல்லவா? அதில் என்ன எழுதியிருந்தேன் என்பது ஞாப கம் இருக்கிறதா?''

''எவ்வளவோ விஷயம் எழுதியிருந் தாய்; எதைச் சொல்கிறாய்?''

'' 'காஞ்சி சுந்தரியை நீ எடுத்துக் கொள்; சிவகாமி சுந்தரியை எனக்குக் கொடு!' என்று எழுதியிருந்ததைச் சொல்கிறேன்.''

''ஆமாம்! அதைப் பற்றி இப்போது என்ன?''

''அப்போது கேட்டதையே இப் போதும் கேட்கிறேன்.''

''அண்ணா! இது என்ன? காஞ்சி சுந்தரியைத்தான் நம்மால் கைப்பற்ற முடியவில்லையே?''

''காஞ்சி சுந்தரி உனக்குக் கிடைக்க வில்லை! ஆனாலும், சிவகாமியை எனக் குக் கொடு என்று கேட்கிறேன்.''

''அதெப்படி முடியும்? உண்மை யில் மகேந்திர பல்லவனுடைய சபையில் அந்தப் பெண் நாட்டியம் ஆடியபோது நீ ஓலையில் எழுதியிருந்தது எனக்கு ஞாப கம் வந்தது. அவளை என்னுடன் அனுப்ப முடியுமா என்று பல்லவனைக் கேட்டேன். அவன் என்ன சொன்னான் தெரியுமா? கலை உணர்ச்சியில்லாத என்னுடன் அவள் வரமாட்டாள் என்று சொன்னான்! இப்போது மறுபடியும் திரும்பிக் காஞ்சி மீது படையெடுக்கச் சொல்லுகிறாயா?''

''வேண்டாம், தம்பி! மறுபடியும் படை எடுக்க வேண்டாம். காஞ்சி சுந்தரி உனக்குக் கிட்டவில்லை. ஆனால், சிவகாமி சுந்தரி எனக்குக் கிடைத்தாள். அவளைக் கொண்டு வந்தேன்.''

''என்ன? என்ன? உண்மையாகவா?''

''தம்பி! அவளுக்காகவே நான் உன்னைப் போல் வேஷந் தரித்தேன். அவள் தந்தையின் உயிரைக் காப்பாற்றி



னேன். சிவகாமிக்காகவே படைத் தலைமை வகித்து மகேந்திர பல்லவனு டன் மணிமங்கலத்தில் போர் செய்தேன். அவனை முன்விட்டே போரை நடுவில் நிறுத்திவிட்டுப் பின் வாங்கினேன்.''

''அண்ணா! எல்லாம் விவரமாகச் சொல்லு!'' என்று புலிகேசி கேட்க, நாகநந்தி தாம் மூன்று வருஷங்களுக்கு முன்னால் தென்னாட்டுக்கு வந்ததிலிருந்து செய்ததையெல்லாம் விவரமாய்க் கூறினார்.

எல்லாவற்றையும் கேட்ட புலிகேசி, ''அண்ணா! அந்த நாட்டியப் பெண் ணின் மீது உண்மையாகவே நீ காதல் கொண்டிருப்பதாகவா சொல்கிறாய்?'' என்று நம்பிக்கையில்லாத குரலில் வினவினார்.

''ஆமாம், தம்பி! சத்தியமாகத் தான்.''

''ஆனால், நீ அஜந்தாவில் புத்தகுரு வின் முன்னால் செய்த பிரதிக்ஞை என்ன ஆவது? நாடெங்கும் காவித் துணி

அணிந்து ஸ்திரீலோலர்களாய்த் திரியும் கள்ளப் பிக்ஷுக்களின் கூட்டத்தில் நீயும் சேர்ந்துவிடப் போகிறாயா அண்ணா?''

'' தம்பி! இந்தக் கேள்வியை எதிர்பார்த்தேன். இதற்கு மறுமொழி சொல்லவும் ஆயத்தமாய் இருக்கிறேன். ஆனால், இரண்டொரு வார்த்தையிலே சொல்ல முடியாது. விவரமாகச் சொல்ல வேண்டும். கேட்கிறாயா?''

''கட்டாயம் கேட்கிறேன். ஆனால், சொல்லத்தான் வேண்டுமென்று உன்னை நான் கட்டாயப்படுத்தவில்லை. உனக்கு இஷ்டமிருந்தால் சொல்லு; இல்லாவிட்டால் சொல்ல வேண்டாம்!'' என்றார் வாதாபிச் சக்கரவர்த்தி.

உண்மையில் மேற்படி விவரத்தைக் கேட்கப் புலிகேசியின் உள்ளம் துடிதுடித்தது. அதே கணத்தில் அவருடைய மனத்தில் அசூயையின் விதையும் விதைக்கப்பட்டது. இத்தனை நாளும் புத்த பிக்ஷுவின் இருதயத்தில் தன்னைத் தவிர வேறு யாரும் இடம் பெற்றதில்லை. அவருடைய அன்புக்கெல்லாம் தாமே உரியவராய் இருந்தார். தம்முடைய நன்மையைத் தவிரப் பிக்ஷுவுக்கு வேறு எந்த விஷயத்திலும் கவலையும் கவனமும் இல்லாமலிருந்தது.

இவ்வளவு காலத்துக்குப் பிறகு இப்போது பெண் ஒருத்தி, நாட்டியக்காரி, அவருடைய உள்ளத்தில் இடம் பெற்று விட்டாள்! ''ஆம்! இப்போது என்னைக் காட்டிலும் அந்தப் பெண்ணிடந்தான் பிக்ஷுவுக்கு அபிமானம்! அவள் படுநீலியாயிருக்க வேண்டும்!'' என்று புலிகேசி தம் மனத்துக்குள் அசூயையுடன் எண்ணமிட்டார். (தொடரும்)



சென்னை கிண்டியிலுள்ள காந்தி மண்டபத்துக்கு அடுத்தாற்போல் ராஜாஜி நினைவாலயத்தைத் தமிழக அரசு எழுப்பியிருக்கிறது. ராம பிரானின் கிரீடம் போன்ற முகப்புடன் எழுந்துள்ள இந்நினைவாலயம் மிக அழகாகத் துலங்குகிறது. இதனைச் சென்ற 11ந் தேதி பாரத ராஷ்டிரபதி பக்ருதீன் அலி அகமத் திறந்து வைப்பதாக இருந்தது. ஏதோ காரணத்தால் அவர் வர இயலாமற் போகவே, திறப்பு விழா ஒத்திப் போடப்பட்டுள்ளது. ராஜாஜி நினைவாலயம் எழுந்ததன் முழுப் பயன் ராஜாஜியின் கருத்துக்களை மத்திய, மாநில அரசுகள் பின்பற்றி நாடு நலன் பெறும்போதே ஏற்படும்.

சென்னைத் தமிழ் இசைச் சங்கத்தின் வாய்ப்பாட்டுப் போட்டியில் ஸ்ரீமதி தேரா ராஜா ''ராஜாஜி நினைவு'' தம்புராப் பரிசு பெற்றார். மியூசிக் அகாடமியில் டி. ஆர். வேங்கடராம சாஸ்திரி பரிசும், ஆர். கே. மூர்த்தி நினைவுப் பரிசும் பெற்றார்.



'ஆள் பாதி ஆடை பாதி' என்பது போல் பொருள்களை அழகான முறையில் ''பாக்'' செய்துதர வேண்டியிருக்கிறது இந்நாளில். லார்ஸன் டூப்ரோ ஸ்தாபனம் 'பாக்கேஜிங்' தொழிலில் இறங்கித் தானியங்கு முறையில் செயல்படும் நவீன 'பாக்கிங்' இயந்திரங்களைத் தயாரித்துத் தந்திருக்கிறது. இந்த நவீன சாதனங்கள் அயல்நாட்டு ஒத்துழைப்பு ஏதுமின்றி பம்பாய்க்கருகில் தயாரிக்கப்படுவது தனி விசேஷம். ஒரு நவீன கருவியைக் காட்டிக் காட்டி, ''இதை அயல் நாடுகளில் வாங்கினால் மூன்று லட்சம் ரூபாயாகும். இந்தியாவில் ஒரு லட்சத்துக்கும் குறைவான விலையில் தர முடிகிறது'' என்றார் டிவிஷனல் மானேஜர். சென்னை ஐ-ஐ-டி. கல்லூரியில் நடைபெற்ற இந்திய மருந்தக காங்கிரஸ் கண்காட்சியில் இந்த 'பாக்கேஜிங்' கருவிகள் தவிர வேறு பல நிறுவனங்களின் அருமையான தயாரிப்புக்களும் இடம் பெற்றிருந்தன.




சென்னை ஆபட்ஸ்பரியில் இந்தோ-நிப்பன் கலாசாரப் பரிவர்த்தனை சங்கத்தின் ஆதரவில் ஜப்பானிய பாணி மலர் அலங்காரக் கண்காட்சி சிறப்பாக நடந்தது. சங்கத்தின் தலைவர் விசுவநாதன் கண்காட்சியின் ஓர் அம்சத்தை விளக்குகிறார். மேற்படி சங்கம் ஜப்பானிய மொழி வகுப்புகளும் நடத்துகிறது. புது வகுப்பு பிப்ரவரி-5-ந் தேதி தொடங்குகிறது. விலாசம்: 13, முதல் மெயின் ரோடு, சி-ஐ-டி. காலனி, சென்னை-4



# சட்டையை மாற்றும் ஒவ்வொரு முறையும் ஏறத்தாழ ரூ.1 சேமியுங்கள்



அந்த ரூ. ஒன்றே சாதாரண சட்டையைத் துவைத்து அணிவதற்கேற்ற அழகுடன் மிளிர நீங்கள் தரும் சராசரி விலையாகும். நீங்கள் உடுத்துவது 'டெரீன்'® துணியாயிருப்பின் மிடுக்குடன் விளங்க அந்தச் செலவு தேவையேயில்லை. ஏனெனில் 'டெரீன்' துணிகளை இல்லத்திலேயே எளிதில் துவைக்கலாம். இஸ்திரி அவசியமில்லை. உங்கள் நன்மைக்காக நீங்கள் துணிமணிகள் வாங்கும்போது 'டெரீன்' ட்ரேட்மார்க்கைப் பார்த்து வாங்குங்கள். அவற்றின் விலை அதிகமாயினும் சாதாரண துணிகளைவிட மும்மடங்கு அதிகமாக உழைப்பதால், இரண்டு சட்டைகள் அதிகமாகக் கிடைப்பதற்குச் சமம். இக்காட்களில் 'டெரீன்' ஒன்றே எடுப்பான தோற்றத்திற்கும் வரவுக்குத் தக்கபடி வாங்கவும் மிகவும் ஏற்றது.

**துணிமணிகளிலுள்ள 'டெரீன்' ட்ரேட்மார்க் அவற்றின் தரச் சிறப்பை உறுதி செய்கிறது.**

**TERENE**

®'டெரீன்'—கெமிக்கல்ஸ் அண்ட் ஃபைபர்ஸ் ஆப் இந்தியா லிமிடெடின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்

CHAITRA-CAFI-314 TAM

# கடலோரத்தில்

எஸ்.வி.எஸ்

இமயம் முதல் குமரி வரை என்பதும், காசியிலிருந்து ராமேசுவரம் வரை என்பதும் எத்தனையோ பல ஆண்டுகளாக மக்கள் வழக்கில் இருக்கும் சொற்றொடர்கள். பாரத வர்ஷ மக்கள் மொழியால், உடையால், உணவுப் பழக்க வழக்கங்களால் பலப் பல வகையில் பிரிந்து நின்றாலும், ஒரிந்து சமய உணர்ச்சியில் ஒன்றுபட்டு நின்று வந்திருப்பதால் ஏற்பட்ட சொற்றொடர்கள் இவை.



ஸ்ரீராமநாத ஸ்வாமியும் காமகோடி மடமும் அக்னி தீர்த்தமும்

தென்னாட்டிலிருப்பவன் காசிக்குப் போக ஏங்குகிறான். வடநாட்டில் இருப்பவன் ராமநாதனை எப்போது தரிசிப்போம் என்று ஏங்குகிறான். அது மட்டுமல்ல; கங்கை தீர்த்தத்தை ராமநாதனுக்கு அபிஷேகம் செய்தும் ராமேசுவர தீர்த்தத்தை விசுவநாதனுக்கு அபிஷேகம் செய்தும் பிறவிப் பயன் பெற்றுப் பரவசமடைய விரும்புகிறான் ஒவ்வொரு ஹிந்துவும்.

இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த ராமேசுவர ஆலயத்துக்குப் பிப்ரவரி ஐந்தாம் தேதி கும்பாபிஷேகம் என்றால் அங்கு என்ன தான் நடக்கிறது என்று அறிய ஆவல் ஏற்படுவது யாருக்குமே இயல்பல்லவா? கிளம்புங்கள், போகலாம்!



அகர் சுற்று மண்டபம்

ராமேசுவரம் என்பது சின்னஞ் சிறு தீவு. அதனை இணைப்பது பாம்பன் பாலம்தான். பாலம் இல்லாத நாட்களிலே அந்தத் தீவை எப்படிப் பக்தர்கள் அடைந்து சேது ஸ்நானமும், ராமநாதஸ்வாமி தரிசனமும் செய்தார்கள் என்பது நம்மை வியப்பில் ஆழ்த்தக் கூடிய விஷயம். அதுவே பக்தி என்று ஒன்றிருந்தால் அதனால் சாதிக்க முடியாத விஷயமே இல்லை என்பதையும் நிரூபிக்கிறது.

ராமநாத சுவாமி, ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியாலேயே பிரதிஷ்டை செய்யப்பட்டவர். சீதையைச் சிறை மீட்க வந்த ராமபிரான், இராவணை (பிராம்மணனை)னைக் கொன்றதால் ஏற்பட்ட தோஷத்தைப் போக்கிக் கொள்ளச் சிவபிரானை (லிங்க வடிவத்தில்) அர்ச்சிக்க விரும்பினார். ராமர், ஆஞ்சநேயரை லிங்கம் ஒன்று கொண்டு வரும் படி அனுப்பினாராம். அவர் வரக் காலம் தாழ்ந்துவிடவே, சீதா பிராட்டியார் கடல் மணலை லிங்கமாகப் பிடித்து வைக்க ராமர் அதற்குப் பூசை செய்து தமது பாவத்தைப் போக்கிக் கொண்டதாகக் கதை. இந்தக் கதையையே இவ்விதழ் அட்டையில் அழகிய வண்ணச் சித்திரமாக நமது ஓவியர் வினு தந்திருக்கிறார். கோபுரத்துக்குக் கும்பாபிஷேகம் நடப்பதையும் காட்டியிருக்கிறார்.

இதைத் திருஞான சம்பந்தர் பின்வரும் அடிகளில் இலக்கிய நயத்தோடு குறிக்கிறார்:

> தேவியை வவ்விய தென்னிலங்கைத்
> தச மாமுகன்
> பூவியலும் முடி பொன்றுவித்த
> பழி போய்அற
> ஏவிய தொம்சிலை அண்ணல்
> செய்த இராமேச்சுரம்
> மேவிய சிந்தைய ராகள்தாம்
> மேல்வினை வீடுமே

"சிலை அண்ணல் செய்த இராமேச்சுரம்" என்று சம்பந்தப் பெருமான் மிகத் தெளிவாக ராமபிரான் கட்டிய கோயில் என்பதைக் கூறியிருக்கிறார்.

இராமபிரான், "சுவாமியை மட்டும் பிரதிஷ்டை செய்யவில்லை. நித்திய விதி பூஜைகளுக்கு மகாராஷ்டிரப் பிராமணர்களையும் நியமித்தாராம். அவர்கள்தான் பரம்பரை பரம்பரையாக இன்றும் ராமநாத சுவாமிக்குப் பூஜை செய்து வருகிறார்கள்.

'இந்தக் கோயில் ஆதியில் கூரைக் கொட்டகையாக இருந்தது. ஒரு துறவியின் பாதுகாப்பில் இருந்தது. இப்போதுள்ள கோயில் பல நூற்றாண்டுகளில், பலரால் திருப்பணி செய்யப்பெற்ற கூட்டு அமைப்பேயாகும். இவர்களில் முதலிடம் பெறுபவர் ராமநாத

# ஒரு குடமுழுக்கு



ஸ்ரீ பர்வத வர்த்தினி

புரம் சேதுபதி மன்னர்களே. மூல லிங்கம் இருக்கும் கர்ப்பக்கிருகத்தையும், அம்பிகைக் கோயிலையும் கி. பி. 12ம் நூற்றாண்டில் இலங்கை அரசன் பராக்கிரம பாகு என்பவன் கட்டினான் என்பதற்குரிய சான்றுகள் இருக்கின்றன. பதினைந்தாவது நூற்றாண்டில் இராமநாதபுரம் உடையான் சேதுபதியும், நாகப்பட்டினத்துக்கருகில் உள்ள நாகூரைச் சேர்ந்த வைசியர் ஒருவரும் 78 அடி உயரம் உள்ள கோபுரத்தையும், மதிற் சுவர்களையும் கட்டினர். மதுரையைச் சேர்ந்த செல்வரான அடியவர் ஒருவர் அம்பாள் கோயில் பிராகாரத் திருப்பணி செய்தார்... பிறகு மதுரை மன்னர் விசுவநாத நாயக்கரும், இராமநாதபுரம் அமைச்சர்களும் பலப் பல திருப்பணிகள் செய்திருக்கிறார்கள்.'

இராமநாதபுரம் மன்னர்களுக்கு ராம லிங்கர்தான் குலதெய்வம். அந்தப் பரம்பரை வழக்கத்துக்குக் குறைவின்றி இன்றைய மன்னரான எஸ். இராமநாத சேதுபதி அவர்கள் இப்பொழுது இரண்டரை லட்ச ரூபாய் செலவில் பழைய சிற்பப் பணிக்கு உகந்த வகையில் கோயில் நுழைவாயிலில் பாஸ்கர சேதுபதி மண்டபம் மிக அழகாக எடுப்பித்திருக்கிறார்.

தமிழிலக்கியத்துக்கும் இந்து சமயத்துக்கும் பாஸ்கர சேதுபதி செய்துள்ள பணி மிகப் பெரியதாகும். விவேகாநந்தரை அமெரிக்காவுக்கு அனுப்பி வைத்து, அவர் உலகப் புகழ் அடையச் செய்த பெருமை பாஸ்கர சேதுபதியினுடையது. அவர் நினைவாகவும், விவேகாநந்தர் ராமேசுவரத்துக்கு விஜயம் செய்ததின் நினைவாகவும் பாஸ்கர சேதுபதி மண்டபம் நிறுவப்பட்டுள்ளது.

பதினாறு கற்றூண்கள். அவற்றின் நான்கு பக்கங்களிலும் சிற்பவேலைப்பாடுகள் உள்ளன. முகப்பின் உச்சியிலே சோமஸ்கந்த மூர்த்தி கருங்கல் சிற்பமாக விளங்குகிறார். நுழைவாயிலில் ஒரு சிங்கம் நம்மை வரவேற்கிறது. அதன் வாயிலில் எப்படியோ ஒரு கருங்கல் உருண்டை சுற்றிச் சுழல்கிறது.

இத்தகைய சிற்பக் கலை அதிசயங்களை நிகழ்த்தக்கூடிய சிற்பிகள் பரம்பரை பல்லவர் காலத்தோடோ, நாயக்க மன்னர் காலத்தோடோ முடிந்துவிடவில்லை. இதோ, ''விட்ட குறை வந்து தொட்டாச்சு'' என்று சொல்வது போல் மண்டபம் விளங்குகிறது. இப்பணிகளைச் செவ்வனே நடத்தி வரும் சிற்பியார் திரு கே. எம். சேது ஸ்தபதி. செட்டி நாட்டில் வயிரவன்பட்டியைச் சேர்ந்தவர். அவர் சென்ற பத்தாண்டுகளாக ராமநாதன் திருப்பணியிலேயே ஈடுபட்டிருக்கிறார்: இன்னும் திருப்பணி வேலைகள் முடியப் பத்தாண்டுகளாகும் என்கிறார். இப்படி இந்த இறைவன் திருப்பணியிலேயே தமது வாழ்நாளின் பெரும் பகுதியைக் கழிக்க வேண்டும் என்பது போல், தம் பெற்றோர் தமக்குச் 'சேது' என்ற பெயரிட்டதைக் கூறி வியந்து கொண்டிருந்தார்.

அத்துடன் அவருக்கு ஒரு குறை. எவ்வளவு அரிய சிற்ப வேலை செய்தாலும், சமுதாயத்தில் போதிய மதிப்பும் மரியாதையும் ஏற்படவில்லை என்றார். ''கல்லடிக்கிறவன்தானே?'' என்று அலட்சியமாகப் பேசிவிடுகிறார்கள். மற்றொரு குறை: ''கையில் வலுவிருந்து உளி பிடிக்கும் வரை ஏதோ ஊதியம் வருகிறது. நல்ல வேலை செய்தால் அரசாங்கத்தின் பட்டமும் சால்வையும் தோடாவும் கிடைக்கின்றன. பிற்காலத்தில் — உடல் தளர்வுற்ற நிலையில் — என்ன பாதுகாப்பு இருக்கிறது?'' என்று கேட்கிறார்.

முழுத் திருப்பணி விவரமும் அறிய கோயில் நிர்வாக அதிகாரி திரு எஸ். பி. முனிசாமி அவர்களைச் சந்தித்தேன்.

''இந்தத் திருப்பணி வேலை எப்பொழுது தொடங்கியது ?''

''அப்படிக் கேட்டீர்களானால் 1905ம் ஆண்டு தொடங்கியது என்றுதான் கூற வேண்டும். நடுவில் விட்டு விட்டு வேலை செய்து வந்திருக்கிறார்கள். திருப்பணி செய்யத் தொடங்கியவர்கள் செட்டிமார். அவர்களுக்குப் பர்மா, மலேயாவிலிருந்து வந்து கொண்டிருந்த வருமானம் நின்றவுடன் திருப்



கந்தமாதன பர்வதம்

பணி வேலையும் நின்றுவிட்டது. இப்பொழுது சென்ற மூன்று ஆண்டுகளில் சில முக்கியமான திருப்பணிகள் நடந்து முற்றுப் பெற்றிருப்பதால் கும்பாபிஷேகம் நடத்த ஏற்பாடு ஆகியிருக்கிறது.

''மூன்றாவது பிராகாரம் 1740—1770ல் முத்துராமலிங்கச் சேதுபதி அவர்களால் கட்டப்பட்டது. அது முழுவதும் சுண்ணாம்பு காரைத் தூண்களால் ஆனது. அத்தூண்கள் எல்லாம், உப்பங் காற்றுப் பட்டுப் பட்டுப் பொளிந்து போய் வந்தன. அவற்றைச் சிமிண்ட்டினால் பூசிக் கெட்டிப்படுத்தியிருக்கிறோம். சிலர் சிமிட்டியினால் பூசியிருக்கக்

கூடாது, அழகு கெட்டுவிட்டது என்கிறார்கள். இல்லை பெயிண்ட் பூசியதுதான் சரி என்று பலர் சொல்கிறார்கள். எதற்கும் தூண்கள் எவ்வளவு பழுதுபட்டுப் போயிருந்தன என்பதைக் காட்ட இரண்டு தூண்களை மட்டும் பூசாமல் அப்படியே விட்டு வைத்திருக்கிறோம்'' என்றார் திரு முனிசாமி.

அடுத்து மேல கோபுரம் முழுதும் பழுது பார்த்து, பொம்மைகளுக்கு வண்ணப் பூச்சு அளிக்கப்பட்டிருக்கிறது. இந்த வேலைக்கே கிட்டத்தட்ட ஒன்றரை லட்சம் செலவாகியிருக்கிறது. இந்தப் பணி முழுதும் பழனி தேவஸ்தானம் மேற்கொண்டிருக்கிறது. இது தவிர மற்ற விமானங்களிலும் வண்ணப் பூச்சு வேலைகள் நடைபெற்றுள்ளன. விநாயகர், சுப்பிரமணியர் கோயில்களுக்கு இதுகாறும் விமானம் இல்லாமல் இருந்தது. இப்பொழுது விமானங்கள் கட்டப்பட்டிருக்கின்றன.

சுவாமி சன்னிதியிலும் அம்பாள் சன்னதியிலும் துவஜ ஸ்தம்பங்கள் 60 ஆண்டுகளுக்குப் பிறகு இப்போதுதான் புதுப்பிக்கப்பட்டுள்ளன. ஒன்று 42 அடி உயரம். மற்றது 37 அடி உயரம். கேரளத்திலிருந்து நன்கு பாடம் செய்யப்பட்ட மரம் கொண்டு வந்து, அதற்குத் தகடு வேய்ந்து தங்க முலாம் பூசியுள்ளார்கள். மங்களகரமான மஞ்சள் நிறத்தில் மின்னுகின்றன. இப்பணிக்கு நாலரை லட்சம் ரூபாய் செலவாகியுள்ளது.

அம்பாள் மூலஸ்தானத்தில் ஸ்வர்ணபந்தனம் செய்யப்படுகிறது. இதற்குக் கிட்டத்தட்ட இரண்டரை கிலோ தங்கம் பிடிக்குமாம்.

மற்றொரு முக்கியமான பணி: கோவில் முழுதும் பல இடங்களில் மழைக் காலத்தில் ஒழுகிக் கொண்டிருந்தது. இப்பொழுது முழுதும் பழுது பார்த்துச் சதுர ஓடுகளால் தளம் போட்டாகிவிட்டது.

கும்பாபிஷேகத்துக்கெனப் பிரும்மாண்டமான யாகசாலை அமைக்கப்பட்டுள்ளது. தேசம் எங்கிலுமிருந்து 250 சிவாச்சாரியர்களும் 60 வேத பிராமணர்களும், 60 தேவாரம் இசைக்கும் ஓதுவாமூர்த்திகளும் வருகிறார்கள்.

கும்பாபிஷேகம் ஜனவரி முப்பதாம் தேதி தொடங்கி ஐந்தாம் தேதி முடிகிறது. ஆகவே, ரயில்வே நிர்வாகத்தினர் 30-1-75 லிருந்து மூன்று விசேஷ ரயில்களும், மண்டபத்திலிருந்து ராமசேவரத்துக்கு அரை மணி நேரத்துக்கு ஒரு வண்டியுமாக விடத் திட்டமிட்டுள்ளனர். சுமார் இரண்டு லட்சம் மக்கள் கும்பாபிஷேகம் பார்க்கக் கூடுவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. யாத்திரிகர்களுக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் கவனிக்க ராமநாதபுரம் கலெக்டர் முழுப் பொறுப்பையும் ஏற்றிருக்கிறார்.

கும்பாபிஷேகம் தவிர, ராமநாதசுவாமியின் வருட வருமானம் எப்படி என்ற விவரம் கேட்டேன். ஒரே ஒரு துறை வருவாய் பற்றி நிர்வாக அதிகாரி கூறிய போது என் மெய் சிலிர்த்துவிட்டது. கங்காபிஷேகம் உபயாபிஷேகம் வகையில் மட்டும் வருடத்துக்கு நான்கு முதல் ஐந்து லட்சம் வரையில், கிடைக்கும் என்கிறார். அதிலிருந்து காசி கங்கையை ராமலிங்க சுவாமிக்கு அபிஷேகம் செய்வதில் பாரத மக்களுக்கு உள்ள ஆர்வத்தை உணர்ந்தேன். ஒரு சிறு குடம் கங்கை நீரை அபிஷேகம் செய்யக் காணிக்கை ரூ. 3.50தான். இதிலிருந்து கணித்துக் கொள்ளலாம், ஆண்டுதோறும் கங்கையைக் கொண்டு வரும் யாத்திரிகர்கள் எத்தனை பேர் இருப்பார்கள் என்பதை!

இராமேசுவரத்தில் கோயிலுக்கு முன்னால் உள்ள சமுத்திரத்துக்கு அக்னி தீர்த்தம் என்று பெயர். அந்த அக்னி தீர்த்தத்தின் கரையில் காஞ்சி காமகோடி மடம் இருக்கிறது. அக்னி தீர்த்தத்தில் மூழ்கி எழுந்தால், ஆதிசங்கரரையும் அவருடைய சிஷ்யர்களையும் தரிசிக்கலாம். உள்ளே சென்றால் ஆதிசங்கரரின் திருவடிகளை வணங்கலாம். அப்பாதுகைகளைச் சுற்றி மீரா, துக்காராம், ஆண்டாள் என்று பாரத நாட்டுப் பக்த சிகாமணிகளைப் பார்க்கலாம். பாரத நாட்டு எல்லாப் பகுதி மக்களின் உள்ளங்களையும் தொடக்கூடிய அற்புத ஆலயமாகக் காமகோடி மடம் அமைந்துள்ளது.

இராமேசுவரம் வரை வந்துவிட்டு, சேது ஸ்நானம் செய்யாமல் போவதா என்று தோன்றியது. 1964ம் ஆண்டு டிசம்பர் 22ம் தேதி அடித்த புயலில் தனுஷ்கோடி மண் மூடிப் போய்விட்டது. இடிந்து போன சுவர்களும் இயற்கையின் கோபத்துக்கு முன்னால் மனிதன் துரும்பளவுகூட இல்லை என்பதை நிதரிசனமாக இன்றும் நிரூபித்துக் கொண்டிருக்கின்றன.

புயல் விளைவித்த அழிவின் காரணமாக ரயில் நிலையம் போய்த் தண்டவாளமும் போய் விட்டது. ரயில் தண்டவாளம் இருந்த இடத்தில் சாலை போட்டிருக்கிறார்கள். தேவஸ்தானம் ரூ. 75 கொடுத்தால் ஒரு வான் வழங்குகிறது. ஏழு எட்டு பேர் வசதியாக சேது ஸ்நானத்துக்குப் போய் வரலாம்.

கோயில் நிர்வாக அதிகாரி திரு எஸ். பி. முனிசாமி அவர்களை நிர்வாகத்தை இன்னும் சிறப்பிக்க வாய்ப்பிருக்கிறதா என்று வினவினேன். அதற்கு அவர், ''ஸார்! இந்த ஊரில் தனிய பொழுது போக்குகள் ஒன்றும் கிடையாது. கோயிலை விட்டால் வேறு உல்லாசப் பொழுது போக்குமிடம் கிடையாது. ஆகவே, அரசு இந்த ஊரில் யாரையாகிலும் நிர்வாக அதிகாரியாகப் போட்டால் அவர் கூடிய விரைவில் வேறு ஊருக்குப் போகத்தான் பார்ப்பான்! ஆனால் கொஞ்சம் சிரத்தை எடுத்துப் பணி புரியத் தொடங்கினால் எவ்வளவோ செய்யலாம்'' என்று அடக்கமாகக் கூறி முடித்தார்.

அத்தகைய சிரத்தை திரு முனிசாமியிடம் இருப்பதையும் என்னால் காண முடிந்தது. அவர் நிர்வாக அதிகாரியாக வந்தபின் — சென்ற மூன்றரை ஆண்டுகளில் 25 'காட்டேஜ்'களைப் பொதுமக்களின் உபயத்தில் கட்டி முடித்திருக்கிறார். கோயிலில் முக்கிய திருப்பணிகளை நிறைவேற்றியிருக்கிறார். பாராட்டும் வகையில் அமைந்த தொண்டு.

கும்பாபிஷேகமும் அவருடைய இனிய பண்பின் காரணமாகவும் நிர்வாகத் திறமையின் காரணமாகவும் பாரத நாட்டு மக்களின் பெரும் பக்தியின் காரணமாகவும் ஸ்ரீ ராமநாத சுவாமியின் திருவருளாலும் வெகு சிறப்பாக நடைபெறும் என்று எதிர்பார்க்கிறோம்.

"ஆம்! நரசுஸ் காபியேதான்!
ஒன்று என்ன இரண்டு கப்
சாப்பிடுங்களேன்!"



# நரசுஸ் காபி




EP-NC-4

‘‘ஒரு நல்ல சேதி தெரியுமா? நம் ஊருக்கும் ‘பாபி’ படம் வரப் போகிறது நாளையிலிருந்து.’’

‘‘எது? மெட்ராஸிலே ஓகோ என்று ஓடுகிறதே, அந்தப் படமா? வரட்டுமே.... சினிமாக் கொட்டகை என்றிருந்தால் நாலு விதமான படங்களும்தான் வரும்....’’

‘‘நான் நாளைக்குப் பகல் காட்சிக்குப் போகப் போகிறேன்!’’

‘‘போ...மூன்று காட்சிக்கும் போனாலும் அக்கறை இல்லை. என்னால் வர முடியாது.’’

‘‘உங்களை யார் கூப்பிட்டது? நமக்குக் கல்யாணமாகி நாலு மாசம் ஆகிறதே! ஒரு நாள் நீங்கள் என்னைச் சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போனதுண்டா? ஒரு சினிமா! வெள்ளிக்கிழமை போனால் போகிறதென்று கோயிலுக்கு — அதுவும் நன்றாக இருட்டின பிறகுதான் அழைத்துக்கொண்டு போவீர்கள். நான் நிச்சயமாக நாளைக்குச் சினிமாவுக்குப் போகத்தான் போவேன். நீங்கள் வராவிட்டால் போங்கள். அந்த வேணி வருகிறேன் என்று சொன்னாள். அவளோடு போய்விட்டுப் பத்திரமாக வந்து விடுகிறேன். என்ன?’’

‘‘உனக்கு எத்தனை தடவை சொல்வேன்? யாரோடு பழக வேண்டாம், பேச வேண்டாம் என்கிறேனோ அவர்களுடன் பேசு. எதைச் செய்யாதே என்கிறேனோ அதைச் செய். என் உத்தரவு இல்லாமல் எங்கேயும் போகாதே; யாரோடும் வம்பு பேசாதே என்கிறேனே, உனக்கு ஏன் அது புரியவில்லை?’’



# சந்தர்ப்பங்கள்

‘பிச்சம்மா’

‘‘ஏன் அப்படியொரு சிறை வாழ்க்கையை எனக்குத் தரப் படாத பாடுபடுகிறீர்கள்? வேணிதான் தினமும் வீட்டுக்கார அம்மாவிடம் பால் வாங்க வருகிறாளே? அவளே பேசினால் கூட நான் பேசக்கூடாதா? அப்படி என்ன என்மீது உங்களுக்குச் சந்தேகப்பேய்?’’

ராதிகா சற்று உரக்கவே பேசினாள். அவளுக்கு ஆத்திரம். திருமணமானதும் எங்கெல்லாம் போக வேண்டும், எப்படியெல்லாம் வாழ வேண்டும் என்று கனவு கண்டாளோ, அதற்கெல்லாம் நேர்மாறாக அல்லவா அவள் கணவன் பிரகாஷ் இருக்கிறான்?

‘‘உனக்குச் சுதந்திரம் வேண்டுமென்றால் எப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறாய் நீ? அதையாவது சொல்லி விடு!’’

‘‘சுதந்திரம் வேண்டும் என்கிறேன், உங்களை விட்டுத் தனியாக வாழ வேண்டும் என்கிறேன். பேச்சைப் பார் பேச்சை! நீங்கள்தான் அழைத்துப் போங்களேன், ஒரு நாளைக்கு......’’

‘‘ஏன், அப்படி வாழ்வதென்ன உங்களுக்குப் பிடிக்காத ஒன்றா? பழக்கமாகாத ஒன்றா? ஆசையாக இருந்தால் அதையும் செய்வேன்!’’

ராதிகாவுக்கு அம்மாதிரியாக எதற்குப் பேசினோம் என்றாகிவிட்டது. இது போன்ற ஒரு பதில் பிரகாஷிடமிருந்து வருவதற்கான சூழ்நிலை தன் பிறந்த வீட்டில் இருக்கிறது என்பதை அவள் நன்றாக அறிந்திருந்தும் இவ்வாறு பேசியிருக்கக் கூடாதுதான். பிரகாஷின் வார்த்தைகள் நெஞ்சை முள்ளாகக் குத்தின. தன் சகோதரி உஷாவை நினைத்துப் பார்த்தாள் அவள். பாவம்! கணவன் என்ற குடிகாரக் கொடியவனின் தாங்க முடியாத கொடுமைகளால் அவள் நிரந்தரமாகப் பிறந்த வீட்டில் தங்கிவிட நேர்ந்ததானது

எவ்வாறெல்லாம் தன் வாழ்க்கையிலும் தலை காட்டிப் பயமுறுத்துகிறது என்பதை அவள் நினைத்துப் பார்த்தாள். வாயடக்கம் தன்னைப் போன்ற பெண்களுக்கு எவ்வளவு தேவை !

'அக்கா! நான் வாழ்க்கையில் எதை எதையோ உல்லாசமாக அனுபவிக்க ஆசைப் பட்டுத் துடிக்கிறதைப் போலத்தானே நீயும் துடித்திருப்பாய் ? அத்தனை ஆசைகளையும் அடக்கி இப்போது மௌனமே உருவாக அல்லவா நிற்கிறாய் நீ!'

ராதிகா குலுங்கிக் குலுங்கி அழுதாள். பிரகாஷ் தன் உடைகளை மாற்றிக் கொண்டு ஆபிஸிலிருந்து கொணர்ந்த பைல் கட்டில் மூழ்கிவிட்டான்.

நாட்கள் சென்றன.

''உடம்பு மிகவும் களைப்பாக இருக்கிறது. தலைவேறு சுற்றுகிறது....''

நிமிர்ந்து பார்த்தான் பிரகாஷ். தோளை வருடியபடி நின்று கொண்டிருந்தாள் ராதிகா.

''பஜ்ஜி செய்கிற வேலையோ?'' சிரிப்புடன் கேட்டான் அவன்.

''ஒன்றும் தெரியாதவர்போல் கேட்கிறதைப் பார்? உங்களுக்குத் தெரியாதா? இது எனக்கு மூன்றும் மாசம் இல்லையா?''

''தெரியும்.... தெரியும் ....''

'' அம்மா வீட்டுக்குப் போக வேண்டும் போல் இருக்கிறது. இரண்டே நாட்களில் வந்துவிடலாம் .....''

அவள் கேட்டு உடனே பிரகாஷ் ஒப்புக் கொண்ட முதல் விஷயமாகக்கூட இது இருக்கலாம்.

இருள் வேகமாகக் கவ்வ ஆரம்பித்தது.

மொட்டை மாடியில் நின்று கொண்டு வானத்தை வெறித்துப் பார்த்தவாறு இருந்த பிரகாஷ் யாரோ விளக்கு ஒளிரவிட்டதை அறிந்து திரும்பிப் பார்த்தான். ராதிகா தன் பெற்றோருடன் டாக்டரிடம் உடம்பைக் காட்டச் சென்றிருந்தாள். அவள் தான் வந்து விட்டாளோ என்றும் நினைத்தான். ஆனால், உஷா !

''இங்கேதான் நிற்கிறீர்களா ? என்ன கற்பனை? பிள்ளையா, பெண்ணா என்று ?''

உஷாவின் குரலில் நல்ல தெளிவு கனிவு இருந்ததை அவன் கவனித்தான். 'நல்ல முகம்; சாந்த குணம்; சுறுசுறுப்பான பேச்சு. ராதிகாவுக்கு நேர்மாறான அக்கா ...' என்று தன் மனசுக்குள் சொல்லிக் கொண்டே,



இவ்விதழ் மேலட்டையில் ஸ்ரீராம பிரானின் தரிசனம் பெறும் நேயர்களுக்கு ராமபக்தியில் இணையற்ற தியாகையரின் விழா திருவையாற்றில் இம்மாதம் முப்பதாம் தேதி மாலை தொடங்குவதை நினைவூட்டுகிறோம். தியாகப்பிரும்ம மகோத்சவ சபையின் தலைவர் திரு கருப்பையா மூப்பனார் விழாவுக்கு அக்கிராசனம் வகிக்கிறார்.

மறுநாள் வெள்ளிக்கிழமை காலையில் பல வித்வான்கள் பஞ்சரத்ன கீர்த்தனைகள் பாட ஆராதனை தொடங்குகிறது.

அன்று மாலை ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் சுமார் ஒன்றரை மணி நேரம் கச்சேரி நிகழ்த்தித் தியாகையருக்குத் தமது அஞ்சலிகளைச் சமர்ப்பிக்கிறார்.

பிப்ரவரி 1-ந் தேதி சனிக்கிழமை நடைபெறவிருக்கும் ஸ்ரீமதி எம். எல். வி. அவர்களின் கச்சேரியைத் தேசிய நிகழ்ச்சியாக அகில இந்திய ரேடியோ ஒலிபரப்புகிறது.

பிரபல வித்வான்கள் வேறு பலரும் ஆராதனை விழாவில் கலந்து கொண்டு சிறப்பிப்பார்கள் என நிர்வாகிகள் எதிர்பார்க்கின்றனர்.



''ஆமாம்; [illegible]!'' என்றான் சிரித்தவாறே.

''துணி உலர்த்தியிருந்தேன். எடுத்துக் கொண்டு போக வந்தேன்...''

''உங்களுக்கு இருபத்துநாலு மணி நேரமும் வேலைதான் போலிருக்கிறது.''

''உழைக்கப் பிறந்தேன்; உழைக்கிறேன்!''

அலுப்புடன் பதில் கூறிக் கொண்டே துணிகளை மூட்டையாகக் கட்டத் துணிந்த உஷா, பிரகாஷின் கண் வீச்சுக்குப் பயந்து வெட்கத்துடன் ஓடப் பார்த்தாள்.

''ஏன் ஓடுகிறீர்கள்? என்னைப் பார்த்தால் பயமாக இருக்கிறதா?''

பிரகாஷின் குரல் கேட்டு நின்றாள் உஷா. அவளருகே வந்த அவன் துணி மூட்டையை வாங்கி ஒற்றைச் சுவர்மீது வைத்தான்.

''இல்லை; நான் போக வேண்டும். நான் இங்கே வந்ததே தப்பு!''

துடித்தாள் உஷா. பிரகாஷ் அவள் கையைப் பிடித்துக் கொண்டான். ''உங்களைப் பார்த்தால் எனக்கு மிகவும் வேதனையாக இருக்கிறது. உஷா... உங்கள் கணவர் கொடுத்து வைக்காதவர்!....'' உஷாவின் கண்களிலிருந்து வழிந்த நீரைத்துடைத்தான்.

''என்னைச் சொல்லுங்கள், கொடுத்து வைக்காதவன் என்று. ஏதோ ஓர் ஆத்திரத்தில், கோபத்தில் வந்துவிட்டேன். உழைப்புத்தான் என் மனசுக்குத் துணை, ஆறுதல் இப்போது. ராதிகாவை நன்றாக வைத்துக் கொள்ளுங்கள். அவள் மனசு கலங்காமல் வைத்துக் கொள்ளுங்கள் ...''

உஷா குழந்தை மாதிரி கெஞ்சினாள். அவளுடைய இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டு அவள் கெஞ்சிய பொழுது ஒருகணம் பிரகாஷுக்கு என்னவோபோல் ஆகிவிட்டது.

''ஒரு பத்து ரூபாய் பணம் வேண்டும்....'' என்றாள் உஷா திடீரென்று.

''எதற்கு?''

''இப்போது சொல்லமாட்டேன். நாளைக்கு இதே நேரம் இந்த இடத்தில் முடிந்தால் சொல்கிறேன்.....''

மணிபர்ஸிலிருந்து பத்து ரூபாயை எடுத்துக் கொடுத்தான் பிரகாஷ். அவள் சிட்டெனப் பறந்துவிட்டாள்.

ஒரு நிமிட நேரம் பிரகாஷ் பிரகாஷாக இல்லை! யாரோ ஒரு பெரியவர் சொன்ன வார்த்தைகளை நினைவுகூட்டிப் பார்த்தான்:

'ஒரு மனிதன் திருடனா நல்லவனா என்பதை ஒரு சந்தர்ப்பத்தில் தீர்மானிக்க முடியும்!'

அவனுக்கே அவன் மனம் விகாரமாகக் காட்சி அளித்தது.

மறு நாள் பகல் உணவு முடிந்ததுமே ஊருக்குக் கிளம்ப வேண்டும் என்று கூறிய பிரகாஷை வியப்புடன் பார்த்தாள் ராதிகா.

**வீ**ட்டுக்குள் வந்து சேர்ந்ததும் பெட்டியைத் திறந்த பிரகாஷ் வியப்பில், ''எப்போது வாங்கினாய் இதை?'' என்றவாறே ஆரஞ்சு நிற உள் பாவாடையை எடுத்தான்.

''இது.... உஷா அக்கா எனக்கு ஆசையாக வாங்கித் தந்தது. பத்து ரூபாயாம். பணத்தில் உங்களைவிட உங்கள் மாமனார் கண்டிப்பு. அவள் பாவம் அந்தப்பத்து ரூபாயை எத்தனை பைசா பைசாவாக எனக்காகச் சேர்த்தாளோ? எனக்குப் பிடித்த நிறத்தில் பரிசாகத் தந்திருக்கிறாள்.....''

ராதிகா மிகவும் நளினமாகப் பேசிக் கொண்டே அவனிடம் நெருங்கினாள். பிரகாஷுக்குத் திடீரென்று உடலெல்லாம் குப்பென்று வியர்ப்பதுபோலிருந்தது. ஒரு சுமை இறங்கிவிட்ட உணர்ச்சி.

''இன்று இரவுக் காட்சிக்குச் சினிமா போகலாமா?''

''சினிமாவா? குழந்தை பிறக்கட்டும். அப்போது போவோம். வெளியே நின்று கொண்டு நீங்கள் குழந்தையை அழாமல் பார்த்துக் கொள்ளுங்கள். நான் ஜாம் ஜாம் என்று சினிமா பார்க்கிறேன்....!''

ராதிகாவின் குறும்புப் பேச்சு அப்போது அவனுக்கு வெகு ரசனையாகவே இருந்தது.

## பூர்வ கதை

பெரும் செல்வந்தர் ஆரோக்கியசாமியின் மகன் ஒரு பெண்ணைப் பலவந்தப்படுத்த முயல்வதைக் கண்டு ஆத்திரமடைந்த டாக்ஸிடிரைவர் தாமஸ், அவனை ஓர் இரும்புத் தடி கொண்டு அடித்துக் கொன்று விடுகிறான். போலீஸில் சரணடையு முன்னர் மாதா கோயில் சென்று பாதிரி அருமைநாயகத்திடம் பாவ மன்னிப்புக் கோருகிறான் தாமஸ். அவன் கதையைக் கேட்ட பாதிரி, சட்டப்படியேகூட அவன் கொலைக் குற்றவாளியல்ல என்று தீர்மானித்து அவனைக் காக்க முடிவு செய்கிறார். சாட்சியங்கள் கண்டு பிடிக்கும்வரை அவனைக் கண் மறைவாக இருக்கச் செய்கிறார். தாமஸைத் தேடிவந்த இன்ஸ்பெக்டர், கொலைக் குற்றவாளியைத் தப்பிக்க வைத்ததற்காகப் பாதிரி அருமைநாயகத்தைக் கைது செய்கிறார். இன்ஸ்பெக்டர் கேட்டதற்கு இணங்கப் பாதிரி வாக்கு மூலமும் எழுதித் தந்து விடுகிறார். பாதிரியின் டெலிஃபோன் அழைப்பை ஏற்று வந்த பிரபல வழக்கறிஞர் சத்தியநாராயணா, வாக்குமூலத்தைப் படித்துவிட்டுத் திகைக்கிறார். இருப்பினும் ஜாமீனில் அவரை விடுவிக்க முயல்வதாகக் கூறுகிறார்.

தெலுங்கரான சத்தியநாராயணா, தமிழ்மகள் பங்கஜத்தை மணந்துகொண்டு பெற்றெடுத்த பிள்ளை வெங்கட். விளையும் வாலிப வயதினனுமான வெங்கட், சிறிய டேப்ரிகார்டரை மறைவிடங்களில் வைத்து ரகசிய உரையாடல்களைப் பதிவு செய்வதை ஒரு பொழுது போக்காகக் கொண்டிருக்கிறான்.

காட்சி 4

(வக்கீல் சத்தியநாராயணா வீடு. அருமைநாயகம் நின்று கொண்டிருக்கிறார். பங்கஜம் உள்ளே யிருந்து வருகிறாள்.)

பங்கஜம்: உக்காருங்கோ. அவர் பூஜை பண்ணிண்டு இருக்கார். இதோ வந்துடுவார். உக்காருங்கோ.

அருமைநாயகம்: எல்லாரும் சௌக்யமா இருக்கீங்களாம்மா? உங்க புருஷன்தாம்மா எனக்கு பெயில் வாங்கிக் கொடுத்தார்.

பங்: எல்லாம் கேள்விப்பட்டேன். ஒண்ணு தெரியுமோ உங்களுக்கு? அவரை விட அவர் பையன் வெங்கட் கெட்டிக்காரன்.

அரு: அப்படியா? சந்தோஷம்.

பங்க: ஆமாம். பி. எல். கூட பாஸ் பண்ணிட்டான். வக்கீலாக்கூட என்ரோல் பண்ணிண்டுட்டான். ஆனா இவர்தான் ஜூனியரா எடுத்துக்க மாட்டேங்கறார். அவனும் பிடிவாதமா, நான் யார்கிட்டேயும் ஜூனியரா இருக்க மாட்டேன். தனியாவே கேஸ் நடத்துவேன்கிறான்.

அரு: தன்னம்பிக்கை இருக்கிறது நல்லது தான்.

பங்க: இல்லாமப் போகுமா? அவன் எங்கப்பாவையே உரிச்சுண்டு வந்திருக்கான். எங்கப்பா தன்னம்பிக்கையிலே தானே உழைச்சுத் தானே உயர்ந்தார்!

அரு: அப்படியா?

பங்க: ஆமாம்.... தினமும் எக்ஸைஸ் பண்ணி ஆறு அடி மூணு அங்குலம் உயரத்துக்கு வந்துட்டார்....பார்த்தேளா...பார்த்தேளா... என்னைப் பத்தியே பேசிண்டு இருக்கேன்... உங்களை விசாரிக்கவே இல்லே... ஆத்திலே எல்லாரும் சௌக்கியமா? மாமி எப்படி இருக்கா? (வெங்கட் வருகிறான்.)

வெங்: அம்மா என்ன நீ அவர்கிட்டே போய்...

பங்: தப்பு.... தப்பு.... முருகா... மன்னிச்சுடுங்கோ... எல்லாரையும் இதே மாதிரி விசாரிச்சு உங்ககிட்டேயும் இப்படியே கேட்டுட்டேன். மன்னிச்சுக்குங்கோ... ஏசு சௌக்கியமா இருக்காரா?

வெங்: அம்மா! நீ பேசினதிலே ரொம்ப உளர்றே... ஸார், நான்தான் வெங்கட் பி. ஏ பி. எல்.

அரு: ஓ... நீதான் சத்யநாராயணா மகனா?

வெங்: அவர்தான் என் ஃபாதர்... வந்து ஸார்... நானும் இன்டிபெண்டண்டா ஒரு கேஸ் நடத்தலாம்னு பார்க்கிறேன். உங்க கேஸை எங்கிட்டே விடறேளா?

அரு: என் வழக்காக மட்டும் இருந்தா நான் உங்கிட்டே கொடுப்பேன். இதுலே வேறு ஒருத்தனும் சம்பந்தப்பட்டிருக்கான்.



பங்க: அந்த டாக்ஸி டிரைவர்தானே? பரவாயில்லே. நீங்க வெங்கட்கிட்டே கேஸைக் கொடுங்கோ. பிச்சு உதறிடுவான். அவருக்கு நூறு கேஸ் இருக்கு. டயம் கூட இருக்காது.

வெங்: ஸார்... எங்கப்பா ஓல்ட் டைம் வக்கீல். இப்பல்லாம் அவர் டைப் பிரயோஜனம் இல்லே. ஆர்க்யூமெண்ட், கிராஸ் எக்ஸாமினேஷன் இதெல்லாம் விட டிடெக்டிவ் வேலே பண்ணத் தெரியணும். அதுதான் முக்கியம். அமெரிக்காலே அப்படித்தான். பெரிமேஸன் தெரியுமில்லேயா? நான் அந்த டைப்தான். எங்கப்பா சுத்த மக்கு. நீங்க என்னே ட்ரை பண்ணிப் பாருங்க!

அரு: நான் இந்த கேஸை உங்கப்பா கிட்டே கொடுத்திட்டேன்ப்பா.

வெங்: சரி போகட்டும் விடுங்க. இன்னொரு கேஸ்லே மாட்டிக்கிட்டா என்கிட்டே வர் றீங்களா?

அரு: கேஸ்லே மாட்டிக்கறதுதான் என் தொழில்னு நெனேச்சியா?

பங்க: பொழுது போகாத சமயத்திலே கேஸ்லே மாட்டிக்கலாமே... என் பைய னுக்காக இதைக்கூடச் செய்யக் கூடாதா நீங்க? (சத்யநாராயணு உள்ளேயிருந்து வருகிறுர்.)

சத்: ஏடு கொண்டல வாடா! ஏமி என்ன? என் பெண்டாட்டி என்ன கலாட்டா செய் யுதா?

அரு: சும்மா வேடிக்கையா பேசிக்கிட் டிருந்தாங்க. உங்க பையன் வெங்கட் வெகுளி யாக இருக்கான். எனக்கு அவனேப் பிடிக்குது.

சத்: கூட்டிக்கிட்டுப் போறீங்களா? ஏதோ பாதிரி ஆக்கி உட்டுடுங்களேன். நேனு ரொம்ப நன்றிகா உண்டானு.

பங்க: வெங்கட்டைப் பத்தி ஏதாவது பேசலேனு உங்களுக்குப் பொழுது போகாதே!

அரு: அவன் ஏன் ஸார் பாதிரி ஆகணும்?

சத்: அவன் வேறே எதுக்கும் யூஸ்லெஸ்... அதாவது... உங்களேக் குறைவாப் பேசற மாதிரி இல்லே... தப்பா நினேக்க ஒத்து...

அரு: நான் ஏன் தப்பா நினேக்கிறேன்? உங்க குடும்பத்தைப் பத்தித்தான் எனக்குப் பல வருஷங்களாத் தெரியுமே!

சத்: என் குடும்பம் பல வருஷங்களா இப்படியேதான் இருக்குது.

வெங்: அப்பா....

சத்: நயினு... நயினு... செப்புரா.

வெங்: நயினு...ஒரு நூறு ரூபா வேணுமே?

சத்: எந்துக்குரா?

வெங்: வேணும் செலவுக்கு. இல்லே, டேப் போடட்டுமா? அந்த டேப்! பங்கஜமு ரா...ரா...அது!

சத்: நூறு ரூபா தரேன்... உள்ளே போ.. தரேன்.... நேனு தரேன்... (ஃபாதரிடம்) அது... டேப்.... பங்கஜமு ரா... அனி நானு வுக்க பாட்டு பாடி... அதி பெட் ரூம்... பெட் ரூம் பக்கத்திலே... அதி... ஊரிகே... சும்மா தமாஷ்...

பங்க: எனக்கு வெக்கமா இருக்கு... நான் உள்ளே போறேன்.

(பங்கஜம் உள்ளே போகிறுள்.)

சத்: அது ஒண்ணும் இல்லே... கொஞ்சம் வெக்கம்... பொம்பினே இல்லேயா? வெங்கட் நூறு ரூபா இஸ்தானு... லோபலே வெள்ரா நயினு!

வெங்: உம்... திரும்பி வந்தாலும் வரு வேன்

சத்: ஃபாதர்காரு! ஏழரை நாட்டுச் சனி கூட ஒரு தடவை வந்தா அப்புறம் ரொம்ப வருஷம் கழிச்சுத்தான் திரும்பிவருது! இவனு போயி போயி வரானு.



"சரி, போகட்டும் விடுங்க. இன்னொரு கேஸ்லே மாட்டிக் கிட்டா என்கிட்டே வர்றீங்களா?"

வெங்: அப்பா! ஒண்ணு தமிழாவது பேசு, இல்லே தெலுங்காவது பேசு! ஏன் இப்படித் தமிழ் தெலுங்கு இரண்டும் கலந்து உருப்படாமப் பேசறே!

சத்: என்னடா உருப்படாது? தமிள், தெலுங்கு கலந்தா உருப்படாதா? இவனு ரொம்பக் கண்டானு... அரேய் வெங்கட்! நீ சொல்றது ரொம்பக் கரெக்ட்! தமிள் தெலுங்கு கலந்தா ரிஸல்ட் உருப்படாது. உன்னைப் பார்த்தாலே தெரியுது!

(வெங்கட் உள்ளே போகிறான்.)

அரு: ரொம்ப ஹேப்பி ஃபேமிலி. பார்க்கவே திருப்தியா இருக்கு.

சத்: உம்... உன் தலேகா பயின பிரம்ம தேவுடு சரிகா எழுதலேது... நயினு.... நயினு ....உங்களைத்தான் ...

அரு: நயினுவா?

சத்: ஓ! ஸாரி... ஏமி தப்பு? ஃபாதர்னு அப்பா. அப்பான்னு நைனு. இப்புடு செப்பண்டி! அந்த ஆள் நிரபராதி அனி நீங்க எப்படிச் சொல்றது?

அரு: தாமஸ் கொலே நடந்த அன்னிக்கு டாக்ஸிலே ஒரு பெண்ணே...ஒரு பெண்ணை..., ஐ யாம் ஸாரி; நான் தப்பு பண்ணிட்டேன்!

சத்: ஏமி... பொண்ணு... நீங்க தப்பு பண்ணிட்டே... ஃபாதர்... இந்த வயசிலே ஏமிட்டி இதி?

அரு: ஆமா...தப்புத்தான் செய்ய இருந்தேன். தாமஸ் என் கிட்டே சொன்ன உண்மையை உங்ககிட்டே நான் சொல்ல ஆரம்பிச்சுட்டேன். நல்ல வேளே நிறுத்திட்டேன். சொல்லியிருந்தா பெரிய தப்பு!

சத்: அவன் சொன்னது .... நீங்க சொல்றது...என்ன தப்பு?

அரு: அவன் என்கிட்டே கன்ஃபெஷன்லே — பாவ மன்னிப்புக் கேக்கறபோதுதான் எல்லா விவரமும் சொன்னான். அதை நான் வெளியே சொல்லக் கூடாது.

சத்: என்னு ஃபாதர் இது? கன்பெஷன்லே சொன்னது வெளிலே சொல்லக் கூடாதுனு அவன் எட்லே நிரபராதின்னுஎனக்குத்தெலுசு?

அரு: நான் என்ன செய்ய முடியும்? பாவ மன்னிப்புக் கேக்கறபோது ஒருவன் சொல்றதைப் பாதிரி வெளியே சொல்லக் கூடாது. இது எங்க மதக் கட்டளை.

சத்: நான் யார்கிட்டேயும் சொல்றது லேது...என் கைலே ரகசியமாச் சொல்லுங்கோ.

அரு: இல்லே... அவன் நிரபராதி ; அவ்வளவுதான்.

சத்: மீரு அவன் நிரபராதி சொல்லி சர்டிபிகேட் இஸ்தே ஏக நீஸ்துண்டாரு. கோர்ட் ஒப்புகுதா?

அரு: கோர்ட்டுக்குச் சாட்சியங்கள் வேணும்னு எனக்குத் தெரியும்.

சத்: சாட்சி எவரு? ஏசுவா?

அரு: இப்ப அவர்தான். ஆனா அவர் கருணையை வெச்சுக்கிட்டே மற்றப் பல சாட்சியங்களைச் சேர்த்துடலாம்னு நினைக்கிறேன்.

சத்: கோர்ட்லேயும் இதேதான் நீங்க சொல்றதா?

அரு: ஆமாம்.

சத்: ஜெயிலுக்குப் போறதுன்னு உன் மனசுலே தீர்மானம் ஆயிந்தி!

அரு: ஏசு உண்மையைக் காப்பாத்துவார்.

சத்: கோர்ட் காப்பாத்தாது! நா தகரெ செப்பண்டி.... வக்கீல்கிட்டே அல்லா உண்மை செப்பவால. தெலுசா?

அரு: மிஸ்டர் சத்யநாராயணா, நீங்க என் கேஸ்லே முப்பது நாள் வாய்தா வாங்கிக் கொடுங்க. நான் உண்மையைச் சொல்லக் கூடிய சாட்சியங்களைச் சேகரிச்சுடறேன். நீங்க வாய்தா வாங்கிக் கொடுத்தா போதும்.

சத்: நேனு ஏமி வாய்தா வக்கீலா?

அரு: நான் அப்படிச் சொல்லலே!

சத்: மெட்ராஸ்லே முதல் பத்து வக்கீல்லே நேனு ஒண்ணு. நெக்ஸ்ட் அட்வகேட்ஜெனரல்

**''நிஜம்கானே செப்தானு... கோர்ட்லே சட்டம் ஆண்டவனைத் தடுக்குது... எலக்ஷன்லே பாமர ஜனங்க ஆண்டவனைத் தடுக்குது.... அசெம்பிளிலே மந்திரி சபை தடுக்குது !''**



அப்பாய்ண்ட்மெண்ட் ஒஸ்துந்தி. நேனே கூட அட்வகேட் ஜெனரல் ஆவேனோ என்னமோ... நீங்க வாய்தா கேட்க ரா, ரா அனி கூப்பிடுரு!

அரு: அப்படி இல்லே; ஒரு முப்பது நாள் வாய்தா வாங்கினு சாட்சியங்களைச் சேகரிச்சுக்கிட்டு கேஸை நடத்தலாமே.

சத்: எப்படிச் சாட்சியங்களைச் சேகரிக்கப் போறீங்க?

அரு: சம்பந்தப்பட்டவங்க கிட்டே போய் உண்மை என்னன்னு கேக்கப் போறேன்.

சத்: உடனே உண்மையைச் சொல்லிடுவாங்களா? இப்ப அரிசி கிடைச்சாலும் கிடைக்கும். உண்மை கிடைக்கிறது லேது!

(பங்கஜம் உள்ளேயிருந்து வருகிறாள்.)

பங்: ஏன்னா! இந்தாங்கோ ஹார்லிக்ஸ். ஏன்னா அவர் ஏதாவது சாப்பிடுறாரானு கேளுங்கோ!

சத்: ஏமண்டி... தாகத்துக்கு ஏமாவது காவலா? ஓவல்டின்... ஹார்லிக்ஸ்... மில்க்.

பங்: சே! ஆவர் போய் அதெல்லாம் சாப்பிடுவாரா என்ன? ஏதாவது ஜூஸ் சாப்பிடுறாரான்னு கேளுங்கோ. ஆப்பிள் ஜூஸ், ஆரஞ்சு ஜூஸ்...

சத்: ஏமிட்டிஇதி... வாள்ளு ஃபாதர்... ஆரஞ்சு, ஆப்பிள் எமி ஒத்து... ஜூஸ் தாடியிலே ஒட்டிகினு எரும்பு ஒஸ்துந்தி. அதி ஒத்து! காப்பி சாப்பிடறதா?

பங்: அய்யோ போறுமே.... இப்ப வர காப்பி பவுடரே சகிக்க முடியலே. டீ சாப்பிடுறா கேளுங்கோ!

சத்: டீ... ஃபாதர்க்கு டீயா? டீலே மரத்தூள் ஒஸ்துந்தி... தொண்டையிலே மாட்கினு ஃபாதர் ஏமி ஆவறது? டீ ஒத்து. மோர்! மோர் தாகுத்தாரா?

பங்க: ஏன் அவருக்கு ஜலதோஷம் பிடிக்கணுமா? நல்ல ஹாட் வாட்டர்...!

சத்: நாக்கு பத்திக்குது. ஒத்து... பாக மஞ்சி நீள்ளு... வெல் வாட்டர்!

பங்க: அய்யோ உப்பு கரிக்கும். கொஞ்சம் கூடச் சகிக்காது.

சத்: சரி, ஏமி ஒத்து போ!

பங்: இப்படி ஒண்ணுமே வேண்டாம்னுட்டாரே!

சத்: அதானே? ஏமி ஃபாதர் இதி? எதுவும் வேணும்னு சொல்லிட்டீங்க? லோப்பலே வெள்ளு பங்கஜம்... ஃபாதர் ஏமி வேணும்னு சொல்லுரு. (பங்கஜம் உள்ளே போகிறாள்.)

அரு: அப்ப முப்பது நாள் அட்ஜார்ன்மெண்டுக்கு ஏற்பாடு பண்றேளா?

சத்: சரே... அவத்லே சாட்சியங்க சேர்த்து கோனி கேஸ் ப்ரோஸீட் சேஸ்தாமு...மீரு உடம்பு சரியா இல்லேன்னு சொல்லி டாக்டர் சர்டிபிகேட் வாங்கி வாய்தா தீஸ்தானு.

அரு: எனக்குத்தான் உடம்பு சரியா இருக்குதே.

சத்: அது சரே... வாய்தா வாங்க கோர்ட்டிலோ உடம்பு சரியில்லே அனி செப்தானு!

அரு: அது பொய் இல்லையா?

சத்: லேது... கேஸு!

அரு: எனக்கு உடம்பு சரியில்லேனு என்னாலே பொய் சொல்ல முடியாது.

சத்: நேனு செப்தானண்டி.... என்னி பொய் காவாலண்டி நேனு செப்தானு. நா பேரு சத்யநாராயணா. இனிஷியல் ஏ. ஏ. சத்யநாராயணா - அசத்யநாராயணா. அதோ புக்ஸ் உண்டண்டி ஷெல்ப்லோ, லா புக்ஸு. அன்னி பொய்யே!

அரு: நீங்க எனக்குத் தெரிஞ்சு கோர்ட்லே பொய் சொன்னா, அதைப் பார்த்துக்கிட்டு நான் சும்மா இருந்தா நானும் சேர்ந்து பொய் சொன்ன மாதிரிதான். எனக்கு உடம்பு சரியாத்தான் இருக்குன்னு நான் சொல்லிவிடுவேன்.

சத்: தேவுடா... சரே... எனக்கு உடம்பு சரி இல்லேன்னு செப்தானு.

அரு: அதுவும் பொய்தானே?

சத்: ஏமிட்ரா இதி... கோர்ட்லே பொய் சொல்றது தப்பு லேது.

அரு: பொய் எங்கே சொன்னாலும் தப்பு தான். ஆண்டவன் எல்லா இடத்திலேயும் இருக்கார்.

சத்: கோர்ட்லே லேது... எலெக்‌ஷன்லே லேது... அசெம்பிளிலே லேது. அக்கெடல்லாம் ஆண்டவன் வரமாட்டாரு!

அரு: (சிரிக்கிறார்).

சத்: நிஜம்காவே செப்தானு... கோர்ட்லே சட்டம் ஆண்டவனைத் தடுக்குது... எலெக்‌ஷன்லே பாமர ஜனங்க ஆண்டவனைத் தடுக்குது... அசெம்பிளிலே மந்திரி சபை தடுக்குது!

அரு: நீங்க உங்க அபிப்பிராயப்படிபேசுங்க. அது உங்க இஷ்டம். ஆனா கோர்ட்லே நீங்க எனக்குத் தெரிஞ்சு பொய் சொன்னா அதை நான் நிச்சயமா எதிர்ப்பேன்!

சத்: ஒக்க உபகாரம் சேஸ்தாரா?

அரு: என்ன சொல்லுங்க?

சத்: ஈ கேஸ் தீஸ்குனி போய் வேறு யாராவது வக்கீல் கிட்டே கொடுங்கோ... நாகு தலை நொப்பி ஒஸ்துந்தி.

அரு: பொய் சொல்லாம வாய்தா வாங்க முடியாதா?

சத்: சூஸ்தானு. என் சாமர்த்தியத்தினாலே பை வே ஆஃப் ஆர்க்யூமெண்ட்ஸ் நேனு வாய்தா வாங்கினு அப்புடு மீரு ஏமி செப்தாரு? வாய்தா ஒத்து, ஜெயிலுக்குள்ளே போறேன் அனி சொல்தீங்களா?

அரு: உங்க தொழில் சாமர்த்தியத்தை நீங்க பயன்படுத்துங்க. நான் வேண்டாம்னு சொல்லலே. ஆனா பொய் சொல்லாதீங்க.

சத்: உம்... சரே... சூஸ்தானு... ஃபாதர் நீங்க பொய் சொன்னதே லேதா?

அரு: இதுவரைக்கும் கிடையாது.

சத்: அதான் ஃபாதர் ஆவே இருக்குது. இல்லாட்டி கிராண்ட் ஃபாதர் ஆயிருப்பீங்க! ஏன்னா பொய் சொல்றவங்கதான் இப்ப கிராண்ட்கா உண்டாரு!

அரு: அதை என்னாலே ஒப்புக்க முடியாது.

சத்: ஃபாதர்! கன்ஃபெஷன்லே சொல்றது நீங்க வெளியிலே சொல்லக்கூடாது இல்லே?

அரு: ஆமாம்... ஏன்?

சத்: இக்கடரண்டி... நேனு ஒக்க கன்ஃபெஷன் செப்தானு! ஈ கேஸ் தீஸ்குனேன் பாருங்கோ, நான் ஒரு சரியான மடையனு. என் காலிலே இருக்கிற செருப்பு கயட்டிக்கோனி என் தலைகா பயன அடிக்க வாலே. இதை யார்கிட்டேயும் சொல்லக் கூடாது. இதே கன்ஃபெஷன்! (தொடரும்)

சோர்வா?
பலவீனமா?



சாப்பிடுங்கள்

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்—
# விட்டமின்களும், இரும்புச் சத்தும், தாதுப்பொருட்களும் அடங்கிய பரிபூரண டானிக்



சில டானிக்குகளில் விட்டமின்கள் மட்டுமே உள்ளன. சிலவற்றில் தாதுச் சத்துக்களோ அல்லது இரும்புச் சத்தோதான் உள்ளன. வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் பரிபூரணமானது. அதில் விட்டமின்களும், இரும்புச் சத்தும், தாதுச்சத்துக்களும் சமசீராக இணைந்துள்ளன—

**தினமும் உற்சாகமும், சக்தியும், வலிமையும் கொடுக்கிறது.**

விட்டமின்கள் நிரம்பியது




## வாட்டர்பரீஸ்
# விட்டமின் டானிக்

சுறுசுறுப்பான ஆரோக்கியத்திற்கு பரிபூரணமான டானிக்

## காதலும் மரணமும்

புரியாமல் போய் விடப் போகிறதே என்பதற்காக இந்த ஜப்பானியப் படத்தின் கதையை முன் கூட்டியே அச்சடித்துத் தந்து விட்டார்கள்! அதைப் படித்ததும், 'அடடா, தமிழ் படம் போலவே இருக்கும் போலிருக்கே!' என்று எண்ணினோம்.

இரு நண்பர்கள். வசதியுள்ள ஒருவனுக்கு மற்றவன் ரொம்பக் கடமைப்பட்டிருக்கிறான். பணக்காரன் ஒரு பெண்ணைக் காதலிக்கிறான். ஆனால் அவளோ ஏழையையே மணம் புரிந்து கொள்ள விரும்புகிறாள். ஏழை நண்பன் பணக்காரனுக்காக விட்டுக் கொடுக்கத் தயாராயிருக்கிறான். ஆனால் அந்தப் பெண் மறுக்கிறாள். கடைசியில் பணக்காரன் ஏழை நண்பனை ஆத்திரம் தீர அடித்து நொறுக்கி விட்டு, 'போ, அவளை மணந்து கொள்!' என்று கூறி விடுகிறான். கல்யாணம் நிச்சயமான பிறகு தன் வேலை நிமித்தம் வெளியூர் செல்கிறான் மணமகன். அங்கே அவனுக்குச் செய்தி கிடைக்கிறது, காதலி ஒரு விபத்தில் இறந்து விட்டதாக!

இத்தகைய ஒரு கதை அமைப்போடு தமிழ்ப் படத்துக்கும் இதற்கும் உள்ள ஒற்றுமை முடிந்து போகிறது. மற்றபடி டைரக்ஷன் நுணுக்கம், நடிப்பாற்றல், காமிரா திறன், வசனங்களை அமைத்துள்ள அழகு (ஆங்கிலத்தில் படத்திலேயே எழுதிக் காட்டுகிறார்கள்) உணர்ச்சிகளை அளவோடு வெளிப்படுத்தும் பாங்கு, வெளிப்புறக் காட்சிகளைத் தேர்ந்தெடுத்துப் படம் பிடித்திருக்கும் நேர்த்தி போன்ற எல்லாவற்றிலும் ஒப்புயர்வற்ற கலைநயத்தைக் காண்கிறோம். பல சமயங்களில் நமக்குப் படம் பார்ப்பது போலவே தோன்றவில்லை. ஒரு மகா கவியின் காவியத்தை அனுபவிப்பது போலும், ஒரு மாமேதையின் வண்ண ஓவியங்களைக் காண்பது போலவும் தோன்றுகிறது.

இந்தப் படத்துக்கு முன்னால் 'ஜப்பானில் கடைத் தெருக்கள்' என்ற ஒரு குட்டிப் படம் திரையிடப்பட்டது. ஜப்பான் அடைந்துள்ள வேகமான பிரமிக்கத்தக்க முன்னேற்றத்தை உணர்ந்து பெருமூச்செறிந்தோம்!

### அடித்துப் பிடுங்கும் அரசு!




ஆண்டு வருமானம் 28,500 ரூபாய் உள்ள இங்கிலாந்து நாட்டவரும், ஜப்பானியரும் வருமான வரி கட்டுவதில்லை. அதே வருமானத்துக்கு அமெரிக்கர் 5.6 சதம் வரி கட்டுகிறார். ஆனால் இந்தியரோ 14.7 சதம் வருமான வரி கட்டுகிறார்.

எகனமிக் டைம்ஸ் - பாலி



## கல்யாண ரகசியம்

காந்தன்

ஜெமினி கணேசன் தம் பெயரிலேயே ஒரு நாடகக் குழுவைத் தொடங்கியிருக்கிறார், ஜி. ஜி. தியேட்டர் என்ற பெயரில். அந்தக் குழுவின் முதல் நாடகம் "கல்யாண ரகசியம்".

பணக்கார வாலிபனான சங்கர் உமாவைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொள்ள முடிவு செய்த போது ஒரு கை ரேகை நிபுணர் அவன் மகிழ்ச்சியையே சூறையாடி விடுகிறார். சங்கர் தன் வாழ்வில் ஒருவரை, அதுவும் நன்கு தெரிந்த ஒருவரைக் கொலை செய்ய வேண்டி வருமாம். அது யாரென்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாதாம். அவனாகவே தனக்குத் தெரிந்த நபரைப் பிடித்துத் தீர்த்துக் கட்டி விட்டால் கைரேகை சாஸ்திரத்தின் கணக்குத் தீர்ந்து விடுமாம். அப்புறம் பயமின்றிக் கல்யாணம் செய்து கொண்டு வாழலாமாம்.

கதை அசடு வழிந்தாலும் சிரிப்பு வருகிறதே! கொலை, கிலை என்று வருகிறதைக் கண்டு பயப்பட வேண்டாம். கடைசியில் நாடகம் தமாஷாகவே செல்கிறது.

சங்கராக வரும் ஜெமினி கணேசன் மிகவும் நகைச்சுவையாகவும் தேவையான சமயத்தில் சீரியஸாகவும் நடித்திருக்கிறார். முகத்தில் கலவரத்தையும், கவலையையும் தேக்கி மிக நன்றாக நடித்து நாடகத்துக்கு உயிரூட்டியிருக்கிறார். வேலைக்காரன் காசியாக வரும் மனக்கால் மணி மேடை அனுபவம் மிக்க நடிகர். தன் எஜமானின் குழப்பத்துக்கும், பயத்துக்கும் தூபம் போட்டு, தம் ஹாஸ்ய நடிப்பினால் கைதட்டலைப் பெறுகிறார். சங்கருக்குக் கொலை செய்யப் பல நூறு வழிகளைச் சொல்லும் வாதாபியாக வரும் நாடக டைரக்டர் ஜெமினி மகாலிங்கம் ஒரு காட்சியில் மட்டுமே வந்தாலும், தம் திறமையான நடிப்பினால் ரசிகர்களை அயர்ந்து போகச் செய்து விடுகிறார்.

ரஞ்சனா தேவி, சங்கரின் காதலி உமா. 'காதல் மன்னன்'னுக்கு ஈடு கொடுக்கும் போது எப்படி நடிக்க வேண்டுமோ அப்படி நடித்திருக்கிறார்! மற்ற துணை நடிகர்களும் நாடகத்தின் நகைச்சுவைக் காட்சிகளை வளர்த்துக் கொண்டே நாடகத்தை முடித்து வைக்க உறுதுணையாயிருக்கின்றனர்.

கே. கே. ராமனின் இந்த நாடகத்தில் எல்லாவற்றையுமே ரசிக்க முடியாவிட்டாலும் கடைசி வரை இருந்து பார்த்துச் சிரிக்க முடிகிறதே!

# சமையலுக்குப் பெருந்துணை

ஓய்வில்லா தாய்மார்கள் சுவையான சமையல் செய்ய சுலபமான வழி! இந்த 3 பெருந்துணைகளைப் பின்பற்றி, பல்வேறு இன்பமூட்டும் தின்பண்டங்களைத் தயாரித்து மகிழுங்கள்!......

## பிரவுன் & போல்ஸன்

வெரய்ட்டி
கஸ்டர்டு பவுடர்

6 இனிமையான சுவை வகைகள்! குடும்பத்தினரை மகிழ்விக்க பலூதா, பாயசம், ரபடி ஆகிய பல்வேறு இன்சுவையுள்ள பண்டங்கள் தயாரிக்க சாலச் சிறந்தது.







## பிரவுன் & போல்ஸன்

கார்ன்ஃப்ளவர்

கபாப், சமோசா, பட்டீஸ் ஆகியவற்றை அதிமெல்லியதாகவும் மொரமொரப்பாகவும் ஆக்குகின்றது. குழைவான சுவைமிகு சூப், கிரேவி ஆகியவற்றைக் கெட்டியாகத் தயாரிக்க உதவுகிறது.




## ரெக்ஸ்

பேகிங் பவுடர்

கேக், பிஸ்கோத்து, பக்கோடா, பூரி, குலாப் ஜாமூன் ஆகியவற்றை சுவைபட அதிமென்மையாகத் தயாரிக்க உதவுகிறது. சிறிதளவே சிறப்பாகச் செய்து முடிக்கிறது!

உங்கள் சமையல் உன்னதமாய் இருக்க
உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்
**பிரவுன் & போல்ஸன்** மற்றும் **ரெக்ஸ்**
தரமுயர்ந்த தயாரிப்புகள்
அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்தோடு
பக்குவப்படுத்தப்பட்டவை—கிடைப்பனவற்றிலேயே சிறந்தவை.



**கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா)**
**பிரைவேட் லிட்.**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், எச். ஸோமானி மார்க்,
பம்பாய் 400 001.

OBM 3886 TM

### தலைவர் தரிசனம்-3

# ம.பொ.சிவஞானம்



குடும்ப நண்பர்தான் என்ற போதிலும் திரு ம.பொ. சிவஞானம் அவர்களுடன் எனக்கு நேரடியான பழக்கம் ஏற்பட்டது 1952ம் ஆண்டு பொதுத் தேர்தலின்போது தான். அன்றைக்கே நான் அவரைத் தலைவராக ஏற்றுக் கொண்டுவிட்டேன். அப்போது அவர் காங்கிரஸ் கட்சியைத்தான் சார்ந்திருந்தார். பிறகு சந்தர்ப்பச் சூழ்நிலை காரணமாக அவர் தமிழரசுக் கழகத்தை நிறுவி, காங்கிரஸிலிருந்து பிரிந்து வந்தபோது, எனக்கு அவரை விட்டுப் பிரிய அவசியம் ஏற்படவில்லை. காரணம் ம. பொ. சிவஞானம், அரசியலுக்கும் அப்பாற்பட்ட, மனிதாபிமானம் நிறைந்த ஒரு நல்ல மனிதர். இந்தக் கண்ணோட்டத்தில், என் தலைமைப் பீட பக்தி அவரைவிட்டு அப்பால் இப்பால் நகர வேண்டிய நெருக்கடிக்கு உள்ளாகவில்லை !

வெகு சாதாரணக் குடும்பத்தில் பிறந்து, வாழ்க்கையையும் வெகு சாதாரணச் சூழ்நிலையில் ஆரம்பித்தவர் இவர். நெசவாளிகளிடம் தினசரிக் கூலிக்குப் பாவு போடப்போன ஆரம்ப காலத்தை இவர் மறந்து விடவில்லை.



அப்புறம் ஓர் அச்சுக் கோக்கும் தொழிலாளியாகப் பணியாற்றியதையும் இவர் மறைப்பதில்லை !

கல்லூரியில் புகுந்து பட்டம் பெற இவருடைய பொருளாதார நிலை வாய்ப்புக்களை அளிக்கவில்லை. ராஜாஜி எழுதிய, 'சோக்ரதர்' மார்க்கஸ் அரேலியஸின் 'ஆத்ம சிந்தனைகள்' போன்ற புத்தகங்கள் இவரிடம் விழிப்பைத் தோற்றுவித்தன. ஆன்மீகச் சிந்தனையில் இவரை ஈடுபடச் செய்தன. இலக்கியத் துறைக்கும் இழுத்து வந்தன. விளைவு, சர்வகலாசாலைகளால் கொடுக்க இயலாத 'சிலம்புச் செல்வர்' பட்டத்தைப் பொதுமக்கள் ஆதரவு கொண்டு வந்து சேர்த்தது. இவருடைய வள்ளலார் ஆராய்ச்சி நூலுக்கு மத்திய அரசின் சாகித்திய அகாடமி பரிசும் கிடைத்தது. அரசியல் துறையில் ஈடுபட்ட அறிஞர்களில், இந்த சாகித்திய அகாடமி பரிசு பெற்ற முதல் நபர் ராஜாஜி. இரண்டாவது நபர் ம.பொ. சி.. ராமருக்குக் கிடைத்த கௌரவம் அனுமனுக்கும் கிடைத்தது !

இவரது உடல் நலம் வெகுவாகச் சிறைவாசத்தின் விளைவால் பாதிக்கப்பட்டது. இளைத்த உடலும் பெரிய மீசையும் சேர்ந்து இப்போது கார்ட்டூன் போடுபவர்களுக்கு விருந்தாக இருந்தாலும், ஒருகாலத்தில் இன்றைய மீசைக்குப் பொருத்தமான உடற்கட்டும் அவருக்கு இருந்தது. இதைப் பற்றி அவரே நகைச்சுவையுடன் ஒரு சம்பவத்தை நினைவுகூர்ந்து சொல்லுவார்.

1937ல் ராஜாஜி சென்னை மாகாண முதல் அமைச்சராக இருந்த வேளை. மோட்டா ஆசாமி ம.பொ.சி., ஜில்லா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி. ஒரு பொதுக்கூட்டத்தில் கலந்து கொள்ள அழைக்க வேண்டி ராஜாஜியைச் சந்திக்க ம. பொ. சி. சென்றார். ராஜாஜி ஏற இறங்கப் பார்த்துவிட்டு அவசரம் அவசரமாக அவரை அனுப்பிவிட்டு, சற்று நேரம் கழித்து அதே அறைக்கு வந்த சத்தியமூர்த்தி அவர்களிடம், ''என்னது ! அந்தக் காரியதரிசி ஆசாமி அத்தனை முரடராகத் தோற்றம் அளிக்கிறாரே ! தொண்டர்களுக்கு அன்பை விடப் பயமல்லவா அதிகரிக்கும்?'' என்று விசாரித்தார். ம.பொ.சி.யின் அன்புள்ளத்தைப் பிறகு உணர்ந்து மகிழ்ந்தார்.

அன்றாட வாழ்க்கையில் எளிமையை முழுக்க முழுக்கக் கடைப்பிடிக்கும் நபர் இவர். இரண்டு வேட்டி இரண்டு சட்டை ஒரு மேல் துண்டு! ஒரு பெட்டிக்குள் திணித்துக் கொண்டு சுற்றுப் பிரயாணத்துக்குத் தயாராகி விடுவார். ஆகார விஷயத்திலும் மிகமிக எளிமை. கீரை சாப்பிடுவார் ! இட்லியிலும் ஓர் இட்லிதான். இவர் உயிரை உடலுடன் ஒட்ட வைத்துக் கொண்டிருக்கும் ஒரே ஆகாரம் ஹார்லிக்ஸ்தான். அலிப்பூர் சிறைவாசம் இவர் குடலைப் பாதித்து விட்டது.

சொல்பவர்: பி.டி.பக்ஷிராஜகோபாலன்



## பெருமாள் கைங்கரியம்

நாம்பிர பருணி நதிக் கரையில் அமைந்துள்ள மேலத் திருவேங்கடநாத புரம் கிராமத்தில் வைல மகரிஷியால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளுக்கு அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடக்கவிருக்கிறது. திருப்பணி கைங்கரியம் பூர்த்தியுற சுமார் ஒரு லட்சம் தேவைப்படுகிறது. ஆஸ்திக பக்தர்கள் இந்தத் திருப்பணியில் பங்குகொண்டு பெருமாளின் திருவருட்குப் பாத்திரராகக் கோருகிறோம். திருப்பணிக்கு நிதி அனுப்ப வேண்டிய முகவரி: திரு எஸ். சங்கரசுப்பு, தர்மகர்த்தா, வேங்கடாசலபதி தேவஸ்தானம், மேலத் திருவேங்கடநாதபுரம், திருநெல்வேலி-6.

இன்று மேடைப் பேச்சில் வல்லவர் என்று பெயர் பெற்றிருக்கும் இவர், எந்தச் சூழ்நிலையிலும் எந்தத் தனிப்பட்ட மனிதரையும் தாக்கியோ அல்லது மனம் புண்படவோ பேசியவர் அல்ல. தமக்குச் சொந்தமான ஹோதாவில் லாபமாகுமா நஷ்டமாகுமா என்ற எண்ணத்தில் அவர் எந்தப் பிரச்னையையும் அணுகுவதில்லை. பொதுமக்களுக்கும் நாட்டுக்கும் நன்மை ஏற்படும் என்ற உறுதி தோன்றினால் அவர் தம் கொள்கையை விட்டுக் கொடுக்கத் தயங்கியதில்லை. தம்மிடம் இருந்த தொண்டர்கள் சந்தர்ப்பவசத்தால் மாற்றுக் கட்சிகளுக்குப் போய்விட்டார்களே என்று மனம் கலங்கும் சுபாவமும் இவரிடம் இல்லை.

இவர் வாழ்க்கையில் நிலைகுலையும் அளவுக்கு மனம் கலங்கியதெல்லாம் இரண்டே சந்தர்ப்பங்களில்தான். ஒன்று மகாத்மா காந்தி அடிகள் காலமான போது. இரண்டாவது இவரைப் பெற்றெடுத்த அன்னையார் காலமானபோது. அண்ணல் காலமானபோது பத்து நாட்கள் பிரார்த்தனை செய்தவாறே வீட்டிலே ஆத்ம சிறை இருந்தார். வானொலிப் பெட்டி வைத்துக் கொள்ளும் வசதிகூட அப்போது இவருக்கு இல்லை. ஓரிடத்தில் கொஞ்சம் பணம் கடன் வாங்கி, அதைக் கொண்டு ஒரு மட்டமான வானொலிப் பெட்டியைத் தருவித்து நிகழ்ச்சிகளைக் கேட்டுக் கொண்டே வீட்டில் அடைபட்டிருந்தார். 'இந்தியாவின் ஆஸ்தி ஒரு பிடி அஸ்தி'யாகப் போய்விட்டதே என்று மனம் கலங்கினர்.

இவருக்குக் கோபம் வருவது என்பது வெகு அபூர்வமான விஷயம்தான். அப்படி வந்தால் உடனே உடல் நலமும் பாதிக்கப் பட்டுவிடும்!

முதல் 'உலகத் தமிழ்' மகாநாடு கோலாலம்பூரில் நடந்தபோது பதினெட்டு ஆராய்ச்சி விவாதக் கருத்தரங்குகளுக்கு ஏற்பாடாகியிருந்தது. பதினேழு கருத்தரங்குகள், தமிழ் ஆராய்ச்சி, வளர்ச்சியைப் பற்றி ஆங்கிலத்திலேயே கொட்டி முழக்கின. அவை சம்பந்தப்பட்ட தலைமை உரைகள் முன்கூட்டியே ஆங்கிலத்தில் அச்சடிக்கப்பட்டு, விவாதத்தில் கலந்து கொண்டோர்க்கு வசதியாக விநியோகிக்கப்பட்டன. ஆனால் தமிழிலேயே தயாரிக்கப்பட்ட ஒரு கருத்தரங்கு உரைக்கு, எந்தவிதமான அச்சு முயற்சிகளும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. தலைவர் தம் கையெழுத்துப் பிரதியையே வாசிக்க வேண்டியதாயிற்று. இது 'தமிழுக்கே அவமானம்' என்று ஆவேசத்துடன் சீறி எழுந்தார் சிவஞானம். மறு நாள் கடுமையான உடல் பாதிப்புக்கு ஆனானர்.

ஆபட்ஸ்பரி மாளிகையில் ஒரு சந்தர்ப்பத்தில் அரசாங்கமே பாரதி விழாக் கொண்டாடிய போது, காலம் சென்ற மத்திய மந்திரி டாக்டர் சுப்பராயன், பிரதான விருந்தினராகக் கலந்து கொண்டார். டாக்டர் சுப்பராயன் ஜஸ்டிஸ் கட்சி அனுதாபியாக சென்னை அரசாங்கத்தில் மந்திரி பதவி வகித்தபோது பாரதி பாடலுக்குத் தடை விதிக்க ஏற்பாடு செய்தார். பிறகு மத்திய அரசில் மந்திரி பதவி ஏற்ற போது பாரதியின் உருவத்தையே தபால் தலையில் வெளியிட வழி செய்தார். இந்த மாறுபட்ட குணங்களைச் சுட்டிக்காட்டும் வகையில் அன்றைக்கு அவருக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு உபசாரப் பத்திரத்தில் சில வாசகங்கள் நுழைந்து விட்டன. டாக்டர் சுப்பராயன் அந்த வாசகங்களுக்குப் பொறுப்பு அதே விழாவில் கலந்து கொண்டிருந்த ம.பொ.சி.தான் என்று நினைத்தார். உண்மையை விசாரித்து அறியாமல் ஒரு வேகத்தில் சுப்பராயன், கொஞ்சம் காட்டமாகவே ம. பொ.சியைத் தாக்கிப் பேசிவிட்டார். கூட்டத்தில் கொஞ்சம் சலசலப்பு. சுப்பராயனுக்கு அப்புறம்தான் ம. பொ. சி. பேசவேண்டி இருந்தது. சுப்பராயனுக்குச் சரியான பதில் கொடுக்க வாய்ப்பு இருந்தும், ம.பொ.சி. சிரமப்பட்டுத் தம் கோபத்தை அடக்கிக் கொண்டார். அபாரப் பொறுமையைக் கையாண்டு, வெகு நாகரிகமாகப் பேசி அமர்ந்துவிட்டார். இப்படிக் கோபம் அமுக்கப்படுகிற போதும் ம. பொ. சி.யின் மனசு பாதிக்கப்படுகிறது; தொடர்ந்து உடலும் பாதிக்கப்படுகிறது.

இவரைப் பலர் சரியாகப் புரிந்து கொள்வதே இல்லை. இவரை ஓர் ஆங்கிலத் துவேஷி என்று எடை போடுகிறார்கள். அல்லது தமிழ் வெறியர் என்று முடிவுகட்டி விடுகிறார்கள். இவருடைய தமிழ்ப் பற்று அத்தனை அழுத்தமானது. அவ்வளவுதான். இவருக்கு இனத் துவேஷமும் கிடையாது. மொழித் துவேஷமும் கிடையாது. நெருங்கிப் பழகியவர்கள் இதை நன்கு உணர்வார்கள்.

1967ம் ஆண்டு தேர்தலில் சட்டசபைக்கு நின்று ஜெயித்து ராஜாஜி அவர்களைச் சந்திக்கப் போன போது, ''இந்தா! இவருக்காக வைத்திருந்த மாலையைக் கொண்டா!'' என்று ராஜாஜி அருகிலிருந்தவரிடம் சொன்ன கணத்தை இவர் மறந்ததே இல்லை. வெற்றியின் பெருமிதத்தை அமுக்கிக் கொண்டு, ஒரு மாபெரும் ஸ்தாபனம் தேர்தலில் சரிந்த துக்கம் ம.பொ.சி.யிடம் எட்டிப் பார்த்ததை ராஜாஜி புரிந்து கொண்டார்.

அடுத்த தேர்தலில் கிடைத்த தோல்வியும் ம.பொ.சி.யைப் பாதித்துவிடவில்லை. சம நோக்குடன்தான் எடுத்துக் கொண்டார். ஏனென்றால். அரசியலை இவர் ஒருநாளும் ஆதாய நிலைக்களனாக நினைத்துப் பழகியவர் அல்ல!

கேட்டு எழுதியவர்: **கோமதி ஸ்வாமிநாதன்**




**காந்தியப் பாதையிலிருந்து பாரத அரசு வெகுதூரம் விலகி வந்து விட்டது. இதை ஒப்புக் கொள்வதே போல் ஸ்ரீமதி இந்திரா காந்தி, "காந்திஜி இன்று இருந்தால் இன்றையச் சூழலுக்கு ஏற்பத் தமது கருத்துக்களை மாற்றிக் கொண்டிருப்பார்" என்று திரும்பத் திரும்பச் சொல்கிறார். பிரதமரின் கூற்றுக்குப் பதில் கூறுவதுபோல் அமைந்துள்ளது இந்தக் கட்டுரை.**

காந்தி நூற்றாண்டைக் கொண்டாடி ஐந்தாண்டுகள் ஆகி விட்டன. மற்றொரு காந்தி ஜெயந்தி வந்து போய்விட்டது. **பெரிய மகான்களைப் போற்றிக் கும்பிடுவதும் பிறகு அவர்களது லட்சியங்களை வசதியாக மறந்து விடுவதும் நமது தேசியப் பண்பாகிவிட்டது!** 'காந்திஜியின் லட்சியங்கள் இன்றையச் சூழலுக்குப் பொருந்துமா?' என்று கேட்பது இன்று ஒரு நாகரிகமாகவே ஆகிவிட்டது. இந்தக் கேள்வியே அர்த்தமற்றது என்பது என் அபிப்பிராயம். ஏனென்றால் காந்திஜி சில சாசுவதமான கொள்கைகளுக்காகப் பாடுபட்டார். அவை அவர் காலத்திலும் சரி, இன்றும் சரி, எதிர்காலத்தில் பல நூற்றாண்டுகளுக்கும் சரி, பொருத்தமானவையாகவே இருக்கும். இன்று இந்தியாவை எதிர்நோக்கியுள்ள பிரச்னைகளைப் பற்றி எவ்வளவுக்கெவ்வளவு சிந்திக்கிறேனோ, அவ்வளவுக்குக் காந்திய நடைமுறையே நமது கஷ்டங்களை நிரந்தரமாகத் தீர்க்கவல்லது என உணர்கிறேன்.

சென்ற ஆண்டுதான் உலகப் புகழ் பெற்ற பொருளாதார நிபுணர் டாக்டர் குன்னார் மிர்டல், 'இந்தியாவின் திட்டங்களைத் தீட்டியவர்கள், காந்திஜியின் அடிப்படையான உபதேசங்களை மனத்தில் கொள்ளாததால்தான் படுதோல்வி அடைந்தார்கள்' என்று கூறினார். காந்திய சிந்தனையை விரும்பி ஏற்று மேனாடுகளில் பல நூல்கள் எழுதப்பட்டு வருகின்றன. காந்தியத்தை மேனாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டிய துர்ப்பாக்கிய நிலை நமக்கு விரைவில் ஏற்படும் என்று தோன்றுகிறது!

லட்சியங்களைப் போலவே அவற்றை அடைய மேற்கொள்ளும் மார்க்கங்களும் முக்கியமானவை என்று காந்திஜி சொன்னார். 'சோஷலிஸம் என்பது ஸ்படிகம் போன்று தூய்மையானது. அதை அடையும் மார்க்கங்களும் தூய்மையாய் இருக்க வேண்டும்' என்றார். சோஷலிஸம் பற்றி வாய் கிழியப் பேசுபவர்கள் இதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். காந்திஜி கூறியது ஏதோ பிடிபடாத தத்துவம் அல்ல, யதார்த்த அறிவுடன் பேசப்பட்ட வார்த்தைகளே.

'எளிய வாழ்க்கை, உயர்ந்த சிந்தனை' என்ற கோட்பாட்டையும் காந்திஜி கற்றுத் தந்தார். இதுவும் யோகியின் நிலையிலிருந்து பேசியது அல்ல. பொருளாதார நோக்கிலிருந்து கூறப்பட்ட அறிவுரை. மேனாட்டினர் இதன் முக்கியத்துவத்தை நன்கு உணர்ந்து வருகின்றனர். அபரிமிதமான விஞ்ஞானத் தொழில் வளர்ச்சியானது வேலையின்மை, மையத்தில் அதிகாரங்கள் குவிதல், சூழல் நச்சு மயமாதல் போன்ற பல பிரச்னைகளை மேனாடுகளில் தோற்றுவித்து வருகிறது. எனவே நமது திட்டங்களில் வேலை வாய்ப்புப் பெருக்கத்துக்கே முதலிடம் தரப்பட வேண்டும். இயந்திரங்கள் பற்றிக் காந்திஜியிடம் யாரோ கேட்டபோது அவர் சொன்னார்: 'என்னை என்ன கொள்கைப் பித்தன் என்று எண்ணினீரா? இந்தியாவில் வேலை செய்யச் சக்தி உள்ள அனைவருக்கும் உற்பத்திக்கு உதவுபடியான வேலைகள் கிடைக்க வேண்டும் என்பதொன்றே என் நோக்கம். இதை இயந்திர மயமாக்குவதன் மூலம் சாதிக்க முடியும் என்றால் நான், காதி கிராமத் தொழில் திட்டத்தை மூட்டை கட்டி வைத்துவிடத் தயார்!' **நமக்குத் தேவை பெருவாரியான உற்பத்தி அல்ல, பெருவாரியான மக்கள் மூலம் உற்பத்தி.** இதைக் காந்திஜி உணர்ந்திருந்தார். காதி, கிராமத் தொழில்களுக்குக் காந்திஜி முக்கியத்துவம் அளித்ததை இந்த நோக்கில் நாம் புரிந்து கொள்ள வேண்டும். எல்லா மக்களுக்கும் வேலை வாய்ப்பு என்ற சவாலை ஏற்றுச் சமாளிக்க அரசு கால தாமதமின்றி முன்வரட்டும். இல்லையெனில் திட்டங்கள் எல்லாம் கேலிக்குரியன ஆகிவிடும்.

**ஏழ்மையை ஒழிப்போம் என்று கோஷமிடுகிறார்களே அதன் இணை பிரியாத அம்சமாக மதுவிலக்கு இருக்க வேண்டும்.** ஏழைகளை மதுவின் ஆசைக்குப் பலியாகாமல் காத்தால் அன்றி அவர்கள் வாழ்க்கைத் தரத்தை எப்படி உயர்த்த முடியும்?' ஒரு மணி நேரம் என்னைச் சர்வாதிகாரியாக நியமிப்பீர்களேயானால் முதல் காரியமாக நஷ்டஈடு ஏதும்

அளிக்காமலேயே மதுக் கடைகள், அனைத்தையும் மூடிவிடுவேன்' என்றார் காந்திஜி. ஆனால் இன்றோ, காங்கிரஸில் உழைக்கும் அங்கத்தினராக இருப்பதற்கு மது அருந்தாமையும் காதி அணிதலும் நிபந்தனைகளாக விதிக்கப்பட வேண்டுமா என்பது குறித்து அந்தக்கட்சியில் விவாதம் நிகழ்கிறது! திட்டங்களுக்குப் பணம் சேர்ப்பதற்காக மதுவிலக்கைத் தளர்த்துகிறார்கள். ஒரு ரூபாய் இதன் மூலம் அரசுக்கு வந்து சேர ஏழை மக்கள் நாலு ரூபாய் இழக்கிறார்கள்.

'இந்தியாவுக்கு எத்தனையோ திட்டங்களை வழங்கினேன். அவற்றிலெல்லாம் ஆதாரக் கல்வித் திட்டமே சிறந்ததெனக் கருதுகிறேன்' என்றார் காந்திஜி. அவரது கல்வித் திட்டத்தை மத்திய, மாநில அரசுகள் பரீட்சித்துப் பார்க்கக்கூடத் தயாராக இல்லை! நமது காலத்தின் மிக உயர்ந்த கல்வியாளர் பேராசிரியர் ஜான் டூவே. அவர் நியூயார்க்கில் என்னிடம், 'காந்திஜியின் ஆதாரக் கல்வித் திட்டம், வேறு பல கல்வித் திட்டங்களைவிட மிகவும் முன்னேற்றகரமானது' என்று கூறினார். ஆனால் நமது கல்வி அமைச்சர்கள் இதை இன்னும் புரிந்து கொள்ளவில்லை! கல்விச்சாலைகளில் நாம் காணும் எல்லாப் பிரச்னைகளும், கஷ்டங்களும் தீர வேண்டுமானால், **சமூகத்துக்குப் பயன்படுகிறவிதத்தில், உற்பத்திக்கு உதவுகிற வகையில் கல்வி அமைய வேண்டும்.** நாட்டின் வளர்ச்சியுடன் கல்வி இணை பிரியாததாக இருப்பது அவசியம். பரீட்சை, மாணவர்களின் அன்றாட அலுவல்களின் அடிப்படையில் அமைய வேண்டும். மாணவனின் உற்பத்திக்கு உதவும் போக்கு, சமூக சேவை ஆகியவற்றையும் கணக்கில் எடுத்துக் கொள்வது நல்லது. பள்ளிப் படிப்பு முடித்த பிறகு மாணவர்கள் தாங்களாகவே உழைத்து உற்பத்தி செய்து பிழைத்துக் கொள்ள வழி காட்டுவதாக அமையும் கல்வியே சிறந்தது. குமாஸ்தா வேலை தேடுவதே கல்வியின் லட்சியமாக இருக்கக் கூடாது. அபார புத்தி சாதுர்யம் உள்ளவர்களே மேல் படிப்புக்குக் கல்லூரிகளுக்குச் செல்ல வேண்டும்.

சிறிய தொழிலகங்கள் கிராமப்புறங்களில் தோன்றுவது அவசியம். நமது திட்டங்களை வகுப்பவர்கள் கிராமவாசிகளை அங்கேயே வேலை பார்க்கச் செய்வதே பொருளாதார நோக்கில் சிறந்தது என்பதை அறியவில்லை. நகரங்களுக்கு அவர்கள் குடியேறுகிற நிர்ப்பந்தச் சூழலை ஏற்படுத்துவது சரியல்ல. **கிராமப்புறங்களில் வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்துவதைவிட நகரப் புறங்களில் வேலை வாய்ப்புத் தர ஐம்பது மடங்கு அதிகச் செலவாகிறது.** தொழிலாளர்களுக்குக் குறைந்த பட்ச ஊதியம் நிர்ணயித்துவிட்டு அதற்கு அதிகமாக அவர்கள் சம்பாதிக்க விரும்பினால் உற்பத்தியின் அடிப்படையில் கூலி தரவேண்டும். விவசாயத்திலும் தொழில் துறையிலும் உற்பத்தி பெருக இதுவே வழி. பிலாய் எஃகு ஆலைக்கு விஜயம் செய்த **ருஷ்யத் துணைப் பிரதமர், உற்பத்திக்கு ஏற்பக் கூலி என்ற முறை இங்கு அமுல்படுத்தப்படாதது கண்டு அதிசயித்தார்.** தொழிலாளர்கள் தங்கள் உரிமைகளைக் கோரவும் கடமைகளை மறக்கவும் வசதியாக நாம் பல தொழிலாளர் நலச் சட்டங்களை இயற்றிவிட்டோம். காந்திஜி கூறினார்: 'எனக்கு ஒரே ஒரு உரிமைதான் தெரியும்; கடமையாற்றும் உரிமைதான் அது!' இந்த அடிப்படைக் கொள்கையை மறந்துவிட்டால் விலைவாசிகளைக் குறைப்பதும் உற்பத்தியை அதிகரிப்பதும் வார்த்தை அளவில்தான் இருக்கும்.

ஆத்ம பரிசோதனைக்குக் காந்திஜி முக்கியத்துவம் தந்தார். லஞ்ச ஊழலை ஒழிப்பது போன்றவை முதலில் தன்னிடத்திலிருந்து தொடங்க வேண்டும். லஞ்சம் பற்றிக் கூப்பாடு போடுகிற ஒவ்வொருவரும் தாம் லஞ்ச ஊழலுக்கு அடிமையாகாதிருந்தால் அதுவே நல்ல ஆரம்பம்.

முன்னெப்போதையும்விட காந்திஜி இன்று இந்தியாவுக்கு அத்தியாவசியத் தேவை என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை.

தமிழாக்கம்: **கி. ராஜேந்திரன்**

A. SRINIVASA RAGHAVAN

MITHILAM
SRIRAMNAGAR
TUTICORIN
13-6-72

ஆயிரம் மலர்களைப் படைத்தவன் இறைவன் !
அத்தனைக்கும் பெயரை வைத்தான் மனிதன் !!
ஓய்வு நேரத்தில் தேடினான் காபி(யை) !!!
உயர்ந்த காபி என நாடினான் அய்யங்கார் காபி(யை)!!!!




# அய்யங்கார்ஸ் காபி பவுடர்

| தலைமை ஆபீஸ்: | கிளை: | தி.நகர், ஏஜன்ஸி: |
|---|---|---|
| 45, சுவாமி நாயக்கன் தெரு, | 15, தெற்கு மாடவீதி, | சாந்தி & கோ., |
| சிந்தாதிரிப்பேட்டை | மயிலாப்பூர், | 18, உஸ்மான் ரோடு, |
| (போன்: 24131) | (போன்: 76773) | (போன்: 446387) |

# போஷாக்கு அவசியம்

குழந்தை முதல் முதியோர் வரை குதூகல வாழ்க்கைக்கு

உங்கள் உணவில் பல ஊட்டச்சத்துக்கள் இல்லாமல் இருக்கலாம். ஆல்போ-சாங் அக்குறையைப் போக்கி, அச்சத்துக்களை உங்களுக்கு அளிக்கிறது. கால்ஷியம், பாஸ்பேட்டுகள், கனிச்சத்துக்கள், அத்தியாவசியமான ஊட்டச் சத்துக்கள், சக்தி மிக்க இந்திய ஔஷதங்கள் ஆகியவற்றினால் ஆன ஆல்போ-சாங் நல்ல ஆரோக்கியத்தைப் பெற சிறந்த ஒரு டானிக். வளரும் குழந்தைகள், பாலூட்டும் தாய்மார்கள், வயதானவர்கள் மற்றும் உங்கள் குடும்பத்தில் உள்ள அனைவருக்குமே ஏற்றது ஆல்போ-சாங்.

ஆல்போ-சாங் நீங்கள் உண்ணும் சாதாரண உணவை முழுமையாக்கி, ஜீரணசக்தியைத் தூண்டிவிடுகிறது. உணவுச் சத்துக்கள் உடலில் நன்கு கிரகிக்கப்படுவதற்கு உதவுகிறது. அத்துடன் உங்கள் நரம்புகள் சோர்ந்து விடாதபடி பாதுகாக்கிறது. ஆல்போ-சாங் பவுடர் வடிவிலும், மாத்திரை வடிவிலும் கிடைக்கிறது. மாத்திரைகள் சர்க்கரை சேர்க்கப்படாதவை, எனவே நீரிழிவு நோய் உள்ளவர்களும் சாப்பிடலாம்.






## ஆல்போ-சாங்

உங்கள் குடும்பத்தினர் அனைவரையும் இயற்கையான ஆரோக்கியத்துடன் இருக்கச் செய்கிறது.



ஜே & ஜே. டிஷேன்
லேபொரேட்டரீஸ் பிரைவேட் லிமிடெட்.
ஹைதராபாத்



# பலத்திற்கும் ஆரோக்கியத்திற்கும்

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

1898 முதல் பிரசித்தி பெற்றது

ஆயுர்வேதாஸ்ரமம் லிமிடெட் சென்னை-17.

# நடனம் பேசியது!





★ ஸ்ரீமதி வஸந்தா ஸ்வாமி

★ ஸ்ரீமதி கலாநிதி நாராயணன்

சென்னை, கிருஷ்ணகான சபையில் அண்மையில் நாட்டிய விழா நடத்தியபோது காரியதரிசி யக்ஞராமன் இன்று பிரபலமாக உள்ள பலரது குச்சிப்புடி, ஒடிஸி, பரதநாட்டிய நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்ததோடு நில்லாமல் நடனம் பற்றிச் சிலரைப் பேசவும் வைத்தார். போகி பண்டிகையன்று காலை, முன்பு அமரர் கல்கி அவர்களால் பெரிதும் பாராட்டி எழுதப்பட்ட இரு பெண்மணிகள் பரதநாட்டியத்தின் நிருத்தியம் குறித்தும் அபிநயம் பற்றியும் பேசி, ஆடியும் காண்பித்தனர். இந்த விளக்க உரைகள் பரத நாட்டியத்தின் நுணுக்கங்களை அறிந்தவர்களுக்கும் சரி, சராசரி ரசிகனுக்கும் சரி மிகவும் ருசிக்கும்படியாக இருந்தன.

ஸ்ரீமதி வஸந்தா ஸ்வாமி, குருகுல வாசம் செய்து பயின்றவர் என்றும் ஸ்ரீமதி கலாநிதி நாராயணன் வீட்டில் குரு, சிஷ்யகுல வாசம் செய்து பயிற்றுவித்தார் என்றும் அவர்களை அறிமுகப்படுத்திய திரு ஒய். ஜி. துரைசாமி கூறினார். ஏதோ ஒரு மணி நேரம் டான்ஸ் கிளாஸுக்குப் போய்விட்டு வருவதற்கும், நாட்டியமே வாழ்க்கையாகச் சில காலம் இருப்பதற்கும் எவ்வளவு வித்தியாசம்! ஆனாலும் மாறி வருகிற இன்றையச் சூழலில் குருகுல வாசம் என்பது சாத்தியமில்லையே ?

ஸ்ரீமதி வசந்தா, நிருத்தியங்களின்போது கரம், கழுத்து, கால், இடுப்பு ஆகியவற்றின் அசைவுகள் எப்படி அழகுணர்ச்சியோடு அமைய வேண்டும் என்பதை எடுத்துக் காட்டினார், தெய்வத்துக்கே அர்ப்பணிக்கப்பட வேண்டிய இந்தக் கலையில் அழகுணர்ச்சி குன்றி ஆபாச உணர்வு லவலேசம்கூடத் தலைதூக்கிவிடக் கூடாது என்பதற்காக நமது முன்னோர்கள் மிகவும் சிரத்தை எடுத்துக் கொண்டு சாஸ்திரங்களை அமைத்திருப்பதையும் அந்த வழி முறைகளிலிருந்து வழுவாமலிருந்தால் அழகுணர்ச்சிக்குப் பங்கமே நேராது என்றும் எடுத்துச் சொன்னார்.

ஸ்ரீமதி கலாநிதி நாராயணன் பதங்களில் மேலெழுந்தவாரியாக உள்ள அர்த்தத்தை மட்டுமின்றி உட்பொருளாக உள்ள பாவங்களையும் எப்படி அபிநயங்களில் வெளிக்கொணரலாம் என்பதை உணர்த்தினார். உதாரணமாக, 'தெருவில் வாரானோ என்னைச் சற்றே திரும்பிப் பாரானோ' என்ற வரி எத்தனையோ கற்பனைகளுக்கு இடம் தருகிறது. வாசலில் கோலம் போட்டுக் கொண்டிருக்கும் பெண் தன் காதலன் வருகிறானோ என்று கள்ளத்தனமாய்ப் பார்க்கிறாள். பிறகு வாசலில் தோரணங்கள் கட்டி அழகுபடுத்தும் போது அவற்றை விலக்கிக் கொண்டு எட்டிப் பார்க்கிறாள். அப்புறம் பூத்தொடுத்துக் கொண்டிருக்கும்போது சேடியை அனுப்பிப் பார்த்து வரச் சொல்கிறாள். இவ்விதம் பலவாறான ஏக்கங்களையும் எதிர்பார்ப்புக்களையும் ஏமாற்றங்களையும் கலாநிதி காண்பித்தபோது அவையோர் ஆரவாரம் செய்து மகிழ்ந்தனர்.

இந்த விளக்க உரைகளைப் பார்த்துக் கேட்ட பின்னர் நாடக விழாவுக்குத் தலைமை தாங்கிப் பேசிய கப்புடு அவர்கள் கூறிய சில வார்த்தைகளின் பொருத்தம் புரியும். 'எங்கு திரும்பினாலும் நடனக் கச்சேரி அரங்கேற்றம் என்ற சுழலைக் காணும் போது நடனக் கலை அபார வளர்ச்சி அடைந்துவிட்டது போல் தோன்றும். ஆனால் இது மாயை. தலைக்குத் தலை நட்டுவாங்கம் செய்வதும் பெண்ணாய்ப் பிறந்த பலரும் நாட்டியமாட ஆசைப்படுவதும் கலையின் வளர்ச்சியாகாது. ஆறு மாத அப்பியாசத்துக்குப் பிறகு அரங்கு ஏறுவோரின் எண்ணிக்கை பெருமளவு குறையட்டும்; ஆழ்ந்த புலமையுடன் இக்கலையைப் பயிலுவோரின் எண்ணிக்கை சிறிதளவேனும் உயரட்டும்' என்று அவர் கேட்டுக் கொண்டது – ரொம்ப நியாயம்.

- குட்டிகிருஷ்ணன்



நடன விழா ஆரம்பநாளன்று குமாரி பத்மா சுப்பிரமணியம் பேசுகிறார். அருகில் கிருஷ்ண கான சபைத் தலைவர் வி. டி. ஸ்வாமி அவர்களும் நடனவிழா தலைவர் கப்புடு அவர்களும்.











காட்சிக்குக் காட்சி சிரிப்பு வருகிறது. பழைய ஜோக்கோ, புதிய ஜோக்கோ கேட்கும் போது சிரிப்பு வருகிறது! அதுவரையில் திருப்திப் பட்டுக் கொள்ளலாம். கே. ஏ. தங்கவேலுவின் நடிப்பாற்றல் நகைச்சுவைக்கு மட்டும் அல்ல, திரைக்கதைக்கும் கைகொடுத்து உயிரும் கொடுத்திருக்கிறது. நிதானமாக, அவசரமில்லாமல் அவர் நகைச்சுவையைக் கையாளும் விதமே அலாதி!

## தொட்டதெல்லாம் பொன்னாகும்



ஜெய்சங்கர், ஜெயசித்ரா நடிக்கிறார்கள் என்றால் நாம் என்னத்தை யெல்லாம் எதிர்பார்ப்போமோ அவற்றையெல்லாம் வஞ்சனையில்லாமல் வாரி வழங்கியிருக்கிறார்கள். 'டிஷ்யூம்' 'டிஷ்யூம்' சண்டைகள், நெருக்கமான காதல் காட்சிகள், சிணுங்குதல், பிணங்குதல், பிறகு இணங்குதல் - எல்லாவற்றிலும் ஒரு குறையும் வைக்கவில்லை.

நகைச்சுவை போதாதென்று அசட்டுத்தனங்கள் வேறு சேர்ந்து கொண்டு சிரிப்பாய்ச் சிரிக்கின்றன! அதில் ஸ்ரீப்ரியா ஏற்றிருக்கும் பைத்தியக்கார வேஷம் முதலிடம் பெறுகிறது! தேங்காய் சீனிவாசனும் ஸ்ரீப்ரியாவும் சேர்ந்து கொண்டு பல கோணங்கித்தனங்கள் செய்கின்றனர். எப்படியோ, சிரித்து வாழ வேண்டும். அவ்வளவுதானே!

இவர்கள் கொட்டம் அடித்தது போதாதென்று வி. கே. ராமசாமியும், மனோரமாவும் சேர்ந்து கொண்டு மேலும் ஹாஸ்ய விருந்தை வழங்குகின்றனர். 'அப்படியென்ன உங்களுக்கு வயசாகி விட்டது!' என்று பிறர் சொல்லும் போதெல்லாம் மனோரமா நெளிகிற நெளிவும், பார்க்கிற பார்வையும் - அப்பப்பா!

டைரக்ஷன் திறமைக்காக ஆர். விட்டலையும், ஒளிப்பதிவுக்காகத் தத்தையும் பாராட்டலாம். கவியரசு கண்ணதாசனின் ''பொழுது விடிந்தால்'' என்ற பாட்டு ஜேசுதாசின் கம்பீரமான குரலில் ஒலிக்கிறது. பஞ்சு அருணாசலத்தின் கதையில் பாராட்டுவதற்கு எதுவும் இல்லையென்றாலும் நகைச்சுவையான வசனம் தீட்டி யிருக்கிறாரே; படத்தின் ஜீவநாடி அதுதானே!

எடுத்ததெல்லாம் படம் என்றால், தொட்டதெல்லாம் பொன்னாவதற்குக் கேட்பானேன்?

-காந்தன்

# பொன்னியின் புதல்வர்

சுந்தா

## 26. முதல் இரண்டு நூல்கள்

ஒன்றிரண்டு மூன்றுநான் கைந்தாறு
வேழெட்டு
ஒன்பது பத்துப் பதினொன்று - பன்னி
ரண்டுபதின் மூன்றுபதி னான்குபதி
னைந்துபதி
னாறுபதி னேழுபதி னெட்டு.

- காளமேகப் புலவர்



★ "பல நண்பர்கள் கல்கி யாரென்று அறிய விரும்பி எம்மை வற்புறுத்தி வந்ததால் அவரது போட்டோ படத்தை இதில் சேர்த்திருக்கிறோம்!"

ஒரு நூலாசிரியர் என்ற பதவியை, 1927ல், தமது இருபத்தெட்டாவது வயதில் கல்கி அடைந்தார். "சத்திய சோதனை" முதல் தொகுப்பும், "சாரதையின் தந்திரம்" முதற் பதிப்பும், அடுத்தடுத்து அந்த ஆண்டில் வெளியாயின. இரண்டிலும் அடங்கியவை "நவசக்தி"யில் வெளியானவை.

"சத்திய சோதனை" மொழி பெயர்ப்பு நூலாதலால், "சாரதையின் தந்திரம்" புத்தகமே கல்கியின் முதலாவது படைப்பிலக்கிய வெளியீடு. பின்னால் அவருடைய "சிவகாமியின் சபதம்" போன்ற நூல்கள், நேர்த்தியான காகிதத்தில் வண்ணப் படங்களுடன் வெளியாயின. ஆனாலும் அவை, முதற் புத்தகம் அளித்ததற்கு ஒப்பான ஆனந்தத்தை அவருக்கு அளித்திருக்க முடியாது. மிகச் சாதாரணக் காகிதத்தில் படங்கள் ஏதும் இல்லாமல் வெளியான அது, அவருடைய கண்களுக்கு மிக மிக நேர்த்தியாயும் வண்ண மயமாயும் தோன்றியிருக்க வேண்டும்.

கடந்த அத்தியாயத்தில் கண்டபடி, வீட்டில் வைத்திருந்த அந்தப் புத்தகத்தை விற்பனை செய்யலாம் என்ற எண்ணத்தைப் பிறகு அவர் மாற்றிக் கொண்டார் என்பது, "குமரன்" பத்திரிகையின் மதிப்புரைக்காக அவர் அனுப்பிய பிரதியின் முகப்புப் பக்கத்திலிருந்து தெரிகிறது.



★ "வ. ரா.வை நான்தான் அழைத்து வந்திருக்கிறேன் என்பதாக ஆச்சாரியார் நினைத்துக் கொள்ளப் போகிறாரே என்று எனக்கு ஒரே பயம்!"

அதில், "விலை 0—12—0, விலாசம், முருகவேள் புத்தகசாலை, இராயப் பேட்டை, சென்னை" என்று தம் கைப்படவே எழுதியிருக்கிறார். திரு வி. க. வின் நூல்களைப் பெரும்பாலும் விற்று வந்த அந்த நிறுவனத்தில், ஒரு பகுதிப் பிரதிகளை விற்கக் கொடுத்தார் போலும்!

"குமரன்" மதிப்புரை இப்போது அகப்படவில்லை. ஆனால், "அமிர்த குண போதினி" 15-10-'28 இதழில் வெளியான மதிப்புரை கிடைத்துள்ளது. அக்கால மதிப்புரை பாணிக்கு அது ஓர் எடுத்துக் காட்டு.

சாரதையின் தந்திரம். 'நவசக்தி' பத்திரிகையின் உதவி ஆசிரியராகிய ஸ்ரீமான் ரா. கிருஷ்ண மூர்த்தி அவர்கள் இயற்றியது. விலை அணா 12. இதனில் எட்டுக் கதைகள் உள்ளன. ஒவ்

வொன்றும் புது ருசி. வசன நடை மிக்க மதுரம். வாக்காலங்காரமும், நகைச்சுவை பொருந்திய தொடர்புகளும், ஆங்காங்கு குறித்துள்ள அனுபவங்களும் மனத்தைக் கவர் கின்றன. உண்மையில் நடந்த வண்ணமாகக் கற்பனை செய்துள்ள சாதுரியம் அதி சிலாக் கினைக் குரியது. 'சாரதையின் தந்திரம்' மிக்கச் சுவை. எனினும் அது பயங்கர ஆயுதம். 'ஒன்பது குழி நிலம்' நாளைக்கும் நடக்கும் சங்கதி. ஒரு அல்பத்தில் பெரு விரோதம்; ஒரு நிமிஷத்தில் பகை மறந்து ஒன்றுபடல் — இது வேளையின் கோலமே. 'சுபத்திரையின் சகோதரன்' என்ற பகுதி முற்றிலும் மாறியே தீர வேண்டும். வித்யா வந்தனை விஷதாரியாக்கல் கொடுமை. 'காங் கிரஸ்' 'தற்கொலை' — இவ்விரு கதைகளும் நல்ல அமைப்பு. நரமாமிச பட்சணம் பயங் கரமே. 'விஷ மந்திரம்' ஒரு திடுக்கிடும் உயரிய கற்பிதம். திவ்வியமான நடை. தீண்டாமைக்குச் சாவுமணி. 'நம்பர் 888' நிரபராதிகளும் விடுவிக்க மாளாதவாறு சிக்கிக்கொள்ளும் சந்தர்ப்பங்களை விவரிக்கின் றது. 'கவர்னர் விஜயம்' மிக்க ஹாஸ்யம். இந்நூல் ஓர் அனுபவ ஞானக் கண்ணாடி என்போம்.

''சுபத்திரையின் சகோதரன்'' கதையைப் பற்றி இந்த மதிப்புரையாளர் கூறியுள்ள இதே குறையை, புத்தகத்துக்கு முன்னுரை வழங்கிய ராஜாஜியும் எடுத்துக்காட்டியிருந்தார். ராஜாஜி எடுத்துக் காட்டியதால்தான், அதை மதிப்புரையாளர் சுட்டிக்காட்டினாரோ என்னவோ? எப்படியாயினும், ராஜாஜியின் முன்னுரையைப் பார்ப்போம்.

ஆறு மாதங்களுக்கு முன்னால் ஸ்ரீமான் ரா. கிருஷ்ணமூர்த்தி தாம் எழுதிய சிறு கதைகளின் தொகுதி யொன்றை என்னிடம் கொடுத்து அவைகளை ஒரு கதைக் கொத்தாக வெளியிடலாமா என்று பார்த்துச் சொல் லும்படி கேட்டார்.

அக்கதைகளைப் படித்துப் பார்த்தபோது அவற்றில் நான் எதிர்பாராத அளவு அழகும்

★ ''ஐயா! தமிழ்நாட்டிலே ஒருவர் தமிழ் எழுதுகிறார்!'' என்று கல்கியைப் புகழ்ந்து மகிழ்ந்த ரசிகமணி.



★ ''கடைசியாகத் தொடர்கதையும் எழுத ஆரம்பித்தேன். அவ்வளவுதான்! என் அழகான கையெழுத்து அடியோடு சர்வ நாசத்தை அடைந்தது!''

இரண்டு மாணிக்கங்கள்

''வேட்டிக்குப் போட்டி

சாரதையின் தந்திரம்

★ கல்கி தம் நூலில் கட்டிய சாரதையின் தந்திரத்தின்மீது திரு எஸ். எஸ். வாசன் தமது வியாபாரத் தந்திரத்தைச் செலுத்தி அந்தச் சில நூறு புத்தகங்களையும் அத்தனை நூறு தலைகளில் கட்டினார்.

கற்பனை சக்தியும் கண்டு வியந்தேன். 'சுபத்திரையின் சகோதரன்' என்ற கதையைப் படித்தபோது உலகப் பிரசித்தி பெற்ற ஷேக்ஸ்பியர் எழுதிய 'ஹாம்லெட்'டிலுள்ள நாடக பாத்திரங்கள் ஞாபகம் வந்தன.

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி எனக்குக் கொடுத்த கதைத் தொகுதியிலிருந்து சிலவற்றை நீக்கவும் சிலவற்றை மாற்றவும் காரணம் கண்டு நான் சொன்ன வண்ணம் ஒப்புக்கொண்டு அவ்விதமே செய்திருக்கிறார். ஆனால் நான் ஆட்சேபித்த ஒரு விஷயத்தை இங்கே குறிப்பிடலாம் என்று எண்ணுகிறேன்.

சுபத்திரையின் அண்ணன், 'குள்ள நரி' மாப்பிள்ளையைக் கொன்றது நாடக ரசம் பொருந்தி இருக்கலாம். ஆனால் விஷத்தை மருந்தென்று கொடுத்துக் கொன்றது அழகுக் குறைவு என்பது என் அபிப்பிராயம். மேன்மையான நோக்கத்துக்காகவும் கூட அவ்வித வஞ்சகமும், நம்பிக்கைமோசமும், பொய்யும் கலந்த பிராணஹத்தியைச் செய்வது மகா பாவம். நம்முடைய எண்ணங்களுக்கு மாறாகச் சம்பவங்களும் கஷ்டங்களும் வந்து நின்றால், அவைகளை வேறு வழிகளில் நாம் வெல்லவேண்டுமே யொழிய, பொய்யும் கொலையும் நன்மை தரா. தீமையே பயக்கும். சுபத்திரையின் அண்ணன் தான் செய்ததற்காகப் பிறகு வருந்துவது உண்மையே. ஆனால் செய்த தீவினையின் பயனில் பெரும் வெறுப்பு உண்டாவதுதான் உண்மைப் பச்சாதாபத்துக்கு அறிகுறியாகும். அவ்வாறின்றி, தீவினையின் பயனை அடைய முயன்றால் அப்பச்சாதாபம் உண்மையன்று.

இக்கதைகள் வெறும் பொழுது போக்குக் கதைகள் அல்ல. ஆண் பெண் இருபாலருக்கும் நற்குணம், நல்லொழுக்கம், நல்வாழ்க்கைக்கு மாறுபாடான பழைய வழக்கங்களிலிருந்து விடுதலை அடையும் மனோவன்மை — இவைகளைக் கற்பிக்க வேண்டிப் பொருள் புகட்டி, பயன் தருமாறு அழகுடன் கலந்து ஆக்கிய கற்பனைகள். இப்புத்தகத்தைத் தமிழர்கள் நன்கு ஆதரிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன். பூக்கடைக்கு விளம்பரம் வேண்டியதில்லை.

'சுபத்திரையின் சகோதரன்' கதையைப் பற்றி இன்னும் சில கண்டன வாக்கியங்களை ராஜாஜி எழுதியிருந்தார். அந்த வாக்கியங்களை அவர், முன்னுரை அச்சாவதற்கு முன்னால் விலக்கிவிட்டார். தாமாக அல்ல. பின், யாருடைய வற்புறுத்தலின் பேரில், எப்படி என்பதைக் கல்கியே சொல்லட்டும்:

(ராஜாஜி) அவர்களும் மனமுவந்து சம்மதித்து ஒரு முன்னுரை எழுதித் தந்தார்கள். புத்தகத்தை விட முன்னுரை எவ்வளவோ மேலானதா யிருந்தது. ''பூக்கடைக்கு விளம்பரம் வேண்டியதில்லை'' என்ற முன்னுரையின் கடைசி வாக்கியம், சிரஞ்சீவி இலக்கியத்தில் சேர்க்க வேண்டியதாய் அமைந்திருந்தது. கதைகளைப் பற்றியும் ராஜாஜி பாராட்டித்தான் எழுதியிருந்தார்கள். முக்கியமாக, 'சுபத்திரையின் சகோதரன்' என்ற கதை ஷேக்ஸ்பியரின் ஹாம்லெத்தைப் போல் மனத்தை உருக்குகிறது என்று எழுதியிருந்தார்கள். இதைக் காட்டிலும் சிறந்த பாராட்டுதல் வேறு என்ன வேண்டும்? ஆனால் அதே கதையைப் பற்றி ஒரு கண்டனத்தையும் குறிப்பிட் டிருந்தார்கள். சுபத்திரையின் சகோதரன் தன் சகோதரியைப் பொருத்தமில்லாத மணத்திலிருந்து காப்பாற்றுவதற்காக 'குள்ளநரி' மாப்பிள்ளையை விஷம் கொடுத்துக் கொன்றுவிடுகிறான். ''இது தவறு; என்ன நோக்கத்துடன் செய்தாலும் குற்றம் குற்றமே; நல்ல காரியத்துக்காகவும் கொலையைக் கையாளக் கூடாது; கையாளலாம் என்ற அபிப்பிராயம் வாசகர்களுக்கு ஏற்பட்டுவிடக் கூடாது; அப்படி ஏற்படும்படியாகக் கதை அமைப்பது சரியல்ல'' என்ற முறையில், தர்மாதர்ம ஆராய்ச்சி செய்திருந்தார்கள். காந்தி மகானுடைய அஹிம்சா தர்மத்தினால் பரிபூரணமாக ஆட்கொள்ளப் பட்ட ராஜாஜி இம்மாதிரி கருதியதும் எழுதியதும் இயல்பேயல்லவா? எனக்கு அதைப் பற்றி ஓர் ஆட்சேபமும் தோன்றவில்லை. இந்த மட்டும் என்னைப் பொருட்படுத்தி முன்னுரை அளித்தார்களே என்ற மகிழ்ச்சியுடன் இருந்தேன்.

முன்னுரை அச்சாவதற்கு முன், தற்செயலாகச் சென்னைக்கு வந்திருந்த ஆசிரியர் வ.ரா.விடம் அதைக் காட்டினேன். மிக்க பெருமையுடன்தான் காட்டினேன். காட்டியது தப்பாய்ப் போயிற்று! ''இதென்ன முன்னுரையில் புத்தகத்தைக் கண்டனம் செய்வதா? கொஞ்சமும் நன்றாயில்லை. இப்படியெல்லாம் செய்தால் எழுத்தாளருக்கு உற்சாகம் எப்படி ஏற்படும்? நான் போய் ஆச்சாரியாரிடம் சண்டை பிடிக்கிறேன்'' என்று வ. ரா. கூறினார். தாம் ஆச்சாரியாரைப் பார்த்துப் பேசிவிட்டு முடிவு சொல்லும்வரையில் முன்னுரையை அச்சிடக் கூடாது என்றும் தடை உத்தரவு விதித்தார். ஆச்சாரியார் இருக்குமிடம் தேடிச் சென்று சண்டை பிடிக்கவே செய்தார். நானும் பக்கத்தில் இருந்தேன். வ. ரா.வை நான்தான் அழைத்து வந்திருக்கிறேன் என்பதாக ஆச்சாரியார் நினைத்துக் கொள்ளப் போகிறாரே என்று எனக்கு ஒரே பயம். ஆனால் ஸ்ரீ வ.ரா.வின் இயல்பை நன்கு அறிந்த ஆச்சாரியார் அவ்விதம் எண்ணவில்லை. இருவருக்கும் சுமார் முக்கால் மணி நேரம் விவாதம். 'இரு அறிஞர்களின் அருமையான காலம் என்னால் வீணாகப் போகிறதே!' என்று எனக்கு வருத்தமாக இருந்தது. கடைசியாக, ஸ்ரீ வ. ரா.வின் வற்புறுத்தலை முன்னிட்டு ஆச்சாரியார் கண்டன வாக்கியங்கள் சிலவற்றை அடித்து எடுத்துவிட்டதாக ஞாபகம்.

(வ. ரா. மணிமலர் 1948)

சொந்தப் பணம் போட்டு ஆசையுடன் கல்கி வெளியிட்ட அந்தப் புத்தகத்தின் விற்பனை எப்படி இருந்தது?

# சொகுசான இன்பநல வசதிக்கு

# ஸி.எஸ்.ஸி.

## அதுவும் இப்போது

## நீங்கள் வாங்கக் கூடிய விலையில்



நீங்கள் இதுவரை
அணிந்திராத
வசதிமிக்க சப்பல்ஸ்.
அதுவும் உங்கள் வரவு
செலவைப் பாதிக்காத
விலையில்!






ஸிஎஸ்ஸி—நடைபோடும்
பாதங்கள் நாடியணியும்
நீடித்துழைக்கும் சப்பல்ஸ்.

தயாரிப்பவர்கள்:

**கரோனா ஸாஹூ கம். லிட்.,**

ரெஜிஸ்டர்ட் அலுவலகம்: 221, தாதாபாய் நவ்ரோஜி ரோடு, பம்பாய் 400 001

CHAITRA C.S. 14 TAM

இந்தக் கேள்விக்குப் பதில், சிறிது காலத்துக்குப் பிறகு கற்பனைத் தம்பிக்கு அவர் கூறிய புத்திமதியில் அடங்கி இருக்கிறது :

தம்பி வேண்டாம். நான் சொல்வதைக் கேள். வேறெந்தத் தொழிலுக்குப் போனாலும் போ. ஆனால் இந்தப் பாழும் எழுத்துத் தொழில் மட்டும் வேண்டவே வேண்டாம். தமிழ் நாட்டில் புத்தகமோ கட்டுரையோ எழுதிப் பணக்காரன் ஆன ஒரு மனிதனைக் காட்டு பார்க்கலாம். இங்கிலாந்தில் பெர்னாட் ஷாவும் செஸ்டர்டனும் புத்தகம் எழுதி லக்ஷாதிபதியானால் உனக்கும் எனக்கும் என்ன ஆயிற்று? (ஆ. வி. 14-3-'31)

இவ்வளவு மனச் சோர்வும் கசப்பும் கொள்ளும்படியாக, அவ்வளவு மோசமாகவா புத்தக விற்பனை இருந்தது? மொத்தம் அறுபது புத்தகங்கள் செலவழியவே செய்தன. ஆனால், அவற்றில் அன்பளிப்பாய்க் கொடுத்தவை போக, விலைக்குப் போனவை ஐந்துதான். அந்த ஐந்தையும் நாலரை என்பதாக வைத்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், ஒரு புத்தகம் பாதி விலைக்குப் போயிற்று.

இந்தக் கணக்கு விவரத்தைக் கல்கியே கொடுத்து, மேலும் சொல்கிறார் :

இந்த ஏமாற்றத்தினால் அதைரியம் அடைந்துவிடாமல் மீண்டும் பற்பல முயற்சிகள் செய்தேன். தமிழ் நாட்டில் உள்ள எல்லாப் பத்திரிகைகளுக்கும் மதிப்புரைக்கு அனுப்பினேன். ஒன்று தவறாமல் எல்லாப் பத்திரிகைகளிலும் மதிப்புரைகள் வெளியாயின.

''பூக்கடைக்கு விளம்பரம் வேண்டியதில்லை'' என்று ஸ்ரீ ஆச்சாரியார் முன்னுரையில் எழுதியிருப்பதற்கு விரோதமாகப் பல பத்திரிகைகளில் தடபுடலான விளம்பரங்கள் செய்தேன். ஒன்றும் பயன்படவில்லை. கடைசியில், 'உடும்பு வேண்டாம், கையை விட்டால் போதும்' என்ற கதியாயிற்று. சென்னையை விட்டுக் காந்தி ஆசிரமத்துக்கு நான் கிளம்பியபோது புத்தகங்களை என்ன செய்வது என்ற பெரிய பிரச்னை எழுந்தது. நல்லவேளையாக நண்பர் வாசன் அகப்பட்டார். 'கழுவுக்கு ஏற்ற கோமுட்டி' (செட்டியார்கள் மன்னிக்க வேண்டும்) கிடைத்தார் என்றெண்ணி அவர் தலையில் பாக்கியிருந்த சில நூறு புத்தகங்களைக் கட்டிவிட்டுச்சென்றேன்.

(''சாரதையின் தந்திரம்'' இரண்டாம் பதிப்பின் முன்னுரை)

தம் தலையில் இப்படிக் கல்கி கட்டிய சாரதையின் தந்திரத்தின் மீது, எஸ். எஸ். வாசன், தமது வியாபார தந்திரத்தைச் செலுத்தி, அந்தச் சில நூறு புத்தகங்களையும் அத்தனை நூறு தலைகளில் கட்டினார்.

அப்படிக் கட்டுவதற்கு வகை செய்த விளம்பரம் ஒன்றைப் பார்ப்போம். 1929 மார்ச்சு மாதத்திய ஆனந்த விகடன் இதழில் வெளிவந்தது :

### அழியா இன்பம்

''அழகுடைய ஒரு பொருள் அழியா இன்பம்'' என்பது வரகவியின் வாக்கு. அழகுடைய ஒரு பொருள் பயனுள்ளதாய் இருந்தால் அதன் பெருமையைச் சொல்லவும் வேண்டுமோ? ''சாரதையின் தந்திரம் முதலிய கதைகள்'' அத்தகைய சிறப்புடையதாகும். தேனினும் இனிக்கும் இன்பத் தமிழ்க் கதைகள் எட்டு இந் நூலில் அடங்கி யிருக்கின்றன. ஒவ்வொன்றும் ஒரு புதுச் சுவை; ஒவ்வொன்றிலும் ஓர் உயரிய நோக்கம். காந்தி ஆசிரமத் தலைவர் ஸ்ரீமான் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் இந்நூலுக்கு எழுதியுள்ள முன்னுரையில், ''வெறும் பொழுது போக்குக்கதைகள் அல்ல; பொருள் புகட்டி, பயன் தருமாறு அழகுடன் கலந்து ஆக்கிய கற்பனைகள்'' என்று கூறுகிறார்.



நீச்சல் குளம் ஒன்றில் நீந்தி வருகிறார் இன்றைய அமெரிக்க ஜனாதிபதியான 'ஸ்போர்ட்' உல்லாசத்துக்கு மட்டுமல்ல; உடல் ஆரோக்கியம் பேணவும் தான்!



அறிவாளிகள் உடல் ஆரோக்கியத்தை மறக்கவே மாட்டார்கள். பிக்னிக் செல்லும்போது விறகு வெட்டுவது பொழுதுபோக்குடன் நல்ல தேகப் பயிற்சியும் ஆயிற்றே. பிரமுகர் யார் தெரியுமா? அமெரிக்கத் துணை ஜனாதிபதி நெல்ஸன் ஏ. ராக்கபெல்லர்தான்!

ஏ. சுவாமிநாதன், நன்றி: டைம், ஸ்பான்.

நமது விகடனில் ''கல்கி'' என்னும் புனைபெயருடன் எழுதும் அன்பரே இந்நூலுக்கு ஆசிரியராவார்....

1930 ஜூன் மாதத்தில், வாசன், அதுவரை கல்கி ஆனந்தவிகடனில் எழுதியிருந்த கட்டுரைகளைத் தொகுத்துப் புத்தகமாக வெளியிட்டார். அது பற்றிய விளம்பரமும் சுவையானது :

**ஏட்டிக்குப் போட்டி**
**ஹாஸ்ய விருந்து**

தமிழில் நகைச்சுவையின் இன்பத்தை அனுபவிக்க விரும்புவோர் கல்கியின் இனிய கட்டுரைகளைப் படித்தேயாக வேண்டும் என்று நாம் கூறவேண்டியதில்லை....

பல நண்பர்கள் கல்கி யாரென்று அறிய விரும்பி எம்மை வற்புறுத்தி வந்ததால் அவரது போட்டோப் படத்தையும் இதில் சேர்த்திருக்கிறோம்.

மூந்நூறு பக்கங்கள் — விலை ரூ. 1¼

பிறகு வாசன் ''சாரதையின் தந்திரம்'' இரண்டாம் பதிப்பை வெளியிட்டு, இரண்டு புத்தகங்களையும் சேர்த்து, ''இரண்டு மாணிக்கங்கள்'' என்ற தலைப்புடன் விளம்பரம் செய்தார்.

அக்காலத்தில் ஆனந்தவிகடன் சந்தாதாரர்களாய் இருந்தவர்களில் பலர், அந்த இரண்டு புத்தகங்களையும் வாங்கித் தாமும் படித்துப் பிறருக்கும் படிக்கக் கொடுத்தார்கள்.

அவற்றை அந்த நாட்களில் படித்தவர்களில் ஒருவர், அப்போது அறநிலையப் பாதுகாப்பு அதிகாரியாய் இருந்த டி. கே. சிதம்பரநாத முதலியார். அவற்றைத் தாம் படித்து வியந்ததையும், அந்த வியப்பைத் தமிழ்ப் பெரியார் ஒருவரிடம் தெரிவித்து மகிழ்ந்ததையும், ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு, டி. கே. சி. எடுத்துச் சொன்னார்:

*1931 ஆம் வருஷம் மயிலாப்பூர் சான்தோமில் நான் இருந்தபோது, ''ஏட்டிக்குப் போட்டி'', ''சாரதையின் தந்திரம்'' என்ற புத்தகங்கள் ஒரு நண்பர் மூலமாக எனக்கு வாசிக்கக் கிடைத்தன. அவற்றின் ஆசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தி என்பவர், திருச்செங்கோட்டு காந்தி ஆசிரமத்தில் இருப்பதாக அந்த நண்பர் சொன்னார். புத்தகங்களை வாசித்துக் கொண்டிருந்தபோது, தமிழ் மகளுக்கு என்றும் இல்லாத நல்ல காலம் வந்ததாகவும், படுக்கையோடு படுக்கையாகக் கிடந்திருந்த அவள் எழுந்து நிற்கவும், உல்லாசமாய் ஓடவும் ஆடவும் ஆரம்பித்தது போலவும் தோன்றிற்று. 'என்றுமுள தென்தமிழ் இயம்பி இசை கொண்டான் அகத்தியன்' என்றார் கம்பர். ஆம், கம்பர் வாக்குப் பொய்த்துப் போகாது. புலவர்கள் என்ன சித்திரவதை வேண்டுமானாலும் செய்யட்டும். மூச்சு முட்டச் செய்தாலும் செய்யட்டும், தமிழ் ஒரு நாளும் சாகாது என்று சொல்லத் தைரியம் வந்து விட்டது.*

*மறுநாள், பஞ்ச காவியங்கள் என்றும், சங்க நூல்கள் என்றும் சொல்லும் பழந்தமிழ் நூல்களைக் கற்றநுபவித்ததை விடத் தமிழ் மக்களையும், தமிழ் மக்களின் பாஷையையும் அதிகமாகக் கற்றநுபவித்த மகா மகோபாத்தியாய சாமிநாத ஐயர் அவர்களிடம் நான் போய், ''ஐயா! தமிழ் நாட்டில் ஒருவர் தமிழ் எழுதுகிறார்'' என்றேன். அவர் யார் என்று கேட்டார்கள். ''எனக்கு ஆசிரியரைத் தெரியாது. அவர் திருச்செங்கோட்டில் இருக்கிறாராம். அவர் பெயர் ரா. கிருஷ்ணமூர்த்தியாம். 'ஏட்டிக்குப் போட்டி'யையும், 'சாரதையின் தந்திரத்தை'யும் தாங்கள் வாசிக்க வேண்டும். அதுதான் தமிழ். தமிழுக்குத் தனியான நடை, உடை, பாவனை, அவற்றைக் காட்டுவதற்கு என்றே ஏற்பட்டது போன்ற தெள்வான மக்களுடைய பாஷை, இவற்றை யெல்லாம் அநுபவித்து எழுதுவதே தமிழ் அல்லவா? அந்தப் புத்தகங்களில் அத்தகைய தமிழைக் காணலாம்'' என்று சொன்னேன்.*

(கல்கியின் ''கணையாழி''யின் கனவு'' நூலுக்கு முகவுரை) (19-9-'37)

''ஏட்டிக்குப் போட்டி''யின் இரண்டாம் பதிப்பை, முதற் பதிப்புக்குப் பதினேழு ஆண்டுகளுக்குப் பிறகு — 1947ல் — தமது தமிழ்ப் பண்ணை வெளியீடாகச் சின்ன அண்ணாமலை கொண்டு வந்தார். அதற்கென எழுதிய முன்னுரையில் கல்கி, இருபத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்னே — 1923க்கு — வாசகர்களைக் கூட்டிச் சென்றார். அந்த ஆண்டில், கல்கியின் துண்டுப் பிரசுரம் ஒன்றை ராஜாஜி பாராட்டி, அதன் கையெழுத்து உள்பட எல்லாம் தமக்குப் பிடித்திருப்பதாகச் சொன்னார் அல்லவா? அதில், கையெழுத்தைப் பற்றிய பாராட்டை மட்டும் கல்கி எடுத்துக் கொண்டு, அந்த முன்னுரையில் அதை ஒரு சொல் — வாணமாய் விட்டுக் காட்டினார். அந்த வாண வேடிக்கையின் மூலம் அவர், எழுத்துலகில் அத்தனை ஆண்டுகளில் தாம் அடைந்திருந்த முன்னேற்றத்தைக் காட்டாமல் காட்டினார் :

*உண்மையில், நமது தமிழ்நாட்டுத் தலைவர் ராஜாஜி அவர்கள் முதன் முதலில் என்னிடம் அபிமானம் கொண்டது என்னுடைய கையெழுத்துக்காகத்தான். புகழ்பெற்ற 1923ம்*

அன்றாடம்
வெண்மை
வேண்டும்
எனக்கு



# அன்றாடப் பருத்தி ஆடைகளை வெண்மை பளிச்சிட வெளுப்பது ரின்ஸோ

அன்றாடம் உபயோகிக்கும் பருத்தித் துணிகளின் பிரச்சினை இது: தினமும் அழுக்கேறும், தினமும் வெளுப்பாக்க வேண்டும். இதற்கு விடை: திட வலிமை வாய்ந்த ரின்ஸோ ... அழுக்கை வெளியேற்றி, வெண்மை பளிச்சிட வெளுக்கிறது! மிகச் சிறந்த சோப்பையும் மிஞ்சும் திறனுக்கு உத்தரவாதமானது ரின்ஸோ. விலையோ, மற்ற சலவைப் பவுடர்களை விடக் குறைவுதான்.




மேலும் அதிக வெண்மை பளிச்சிட வேண்டுமா? செய்துபாருங்கள்.

## வெந்நீரிலே ரின்ஸோ சலவை

சூடான வெந்நீரிலே ரின்ஸோ போட்டு நன்றாகக் கலக்குங்கள். குறைந்த பட்சம் ½ மணி நேரமாவது ஊறவிடுங்கள், எப்போதும்போல சலவை செய்யுங்கள். பருத்தித் துணிகள் பளிச்சிடக் காண்பீர்கள்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லிண்டாஸ்-RINSO-6-140 TM

வருஷத்தில் நான் எழுதிய ஒரு துண்டுப் பிரசுரத்தை ராஜாஜி பார்த்துவிட்டு, 'இவருடைய கையெழுத்து வெகு நன்றாக இருக்கிறது!' என்று சொன்னார். ராஜாஜியின் அந்தப் பாராட்டுதலை நான் சென்ற இருபத்து நான்கு வருஷ காலமாக மறவாமல் பாராட்டிப் போற்றி வந்திருக்கிறேன். ஏனெனில் அதற்குப் பிறகு எத்தனையோ தடவை ராஜாஜி என்னுடைய கையெழுத்தைப் பார்க்கும்படி நேர்ந்திருந்தும் ஒரு தடவையாவது 'நன்றாயிருக்கிறது' என்று பாராட்டியிருக்க வேண்டுமே! கிடையவே கிடையாது!

அப்படி நான் நல்ல எழுத்தாளனாக இருந்த காலத்தில் என்னுடைய எழுத்து எல்லோருக்கும் புரியும்படியாக இருந்தது; தனித் தனியாகவும் கோணல் மாணல் இல்லாமலும் முத்துக் கோத்தது மாதிரி இருந்தது. அப்புறம் நான் பத்திரிகைகளுக்குக் கட்டுரையும் கதையும் எழுத ஆரம்பித்தேன்... சின்னஞ் சிறிய 'தமிழ்த் தேனீ' குறிப்புக்கள், நெடிய பெரிய 'அகஸ்தியர்' சிறுகதைகள், பொருள் பொதிந்த ஆழமான கட்டுரைகள், சோக ரஸத்தினால் இளைத்து மெலிந்த கட்டுரைகள், இப்படியாக என்னுடைய அழகான கையெழுத்தை நாசமாக்குவதற்கு என்னென்ன வழிகள் உண்டோ அவ்வளவையும் கையாண்டேன்! கடைசியாகத் தொடர் கதைகளும் எழுத ஆரம்பித்தேன். அவ்வளவு தான்! என் அழகான கையெழுத்து அடியோடு சர்வநாசத்தை அடைந்தது!

''சாரதையின் தந்திரம்'' புத்தகத்தின் மூன்றும் பதிப்பை 1942ல், புதுமைப் பதிப்பகத்தின் வெளியீடாக, அ. லெ. நடராஜன் கொண்டு வந்தார். அந்தப் பதிப்பில் ராஜாஜியின் முன்னுரை இல்லை. அதற்குப் பதிலாக டி.கே.சி. முன்னுரை எழுதி அனுப்பியிருந்தார் என்றும், ஆனால் அது, கல்கியின் யோசனையின் பேரில், பதிப்பில் சேர்த்துக் கொள்ளப்படவில்லை என்றும் தெரிகிறது.

தமது முன்னுரை இடம் பெறாமலிருந்தும், ரசிகமணி, அ.லெ. நடராஜனுக்கு 5-11-42ல் எழுதிய கடிதம் ஒன்றில், அந்தப் பதிப்பைப் பாராட்டி எழுதினார்:

தமிழர்கள் ரொம்பவும் விரும்பிப் படிக்கக் கூடிய புத்தகம் சாரதையின் தந்திரம். புத்தகம் வெளிவந்ததில் கவிஞர் தே. வி.க்கும் எனக்கும் எவ்வளவோ சந்தோஷம். நம்முடைய புதுமைப் பதிப்பகத்திலிருந்து கல்கியின் புத்தகம் ஒன்று வெளிவந்தது பற்றி எனக்குள்ள எக்களிப்பைச் சொல்ல வேண்டியதில்லை.

டி. கே.சி.யின் விடுபட்டுப் போன அந்த முன்னுரை, ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு, ஏற்கனவே குறிப்பிட்ட

## கடமையில் கண்(ணீர்)

தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரியில் பேராசிரியர் அ. சீ. ரா. அவர்கள் ஷேக்ஸ்பியர் நடத்தினால், ஷேக்ஸ்பியரின் கருத்துக்களோடு, கம்பனையும், ஆழ்வார்களின் பாசுரங்களையும், பாரதியின் பாடல்களையும் சேர்த்து அருமையான விளக்கங்களைத் தருவார்கள். அப்படியே மெய்மறந்து கேட்போம்!

பேராசிரியர் அவர்களின் துணைவியார் இறந்து விட்டதாகச் செய்தி கிடைத்தது. மறுநாள் பேராசிரியர் வகுப்பிற்கு வர மாட்டார்கள் என்று நினைத்து விடுதியிலிருந்தோம். ஆனால், ஒரு பியூன் வந்து 'எல்லோரும் வகுப்புக்கு வர வேண்டும், ஐயா வரச் சொன்னார்கள்' என்றான். எல்லோரும் வேகமாக வகுப்புக்குச் சென்றோம். வகுப்பில் எங்களுக்கு முன்பே பேராசிரியர் அவர்கள் சோகமே உருவாக நின்று கொண்டிருந்தார்கள். ஆனால் முகத்தில் கடமை உணர்வு தெரிந்தது.

தற்செயலாகக் கீழ்க் கண்ட பகுதியை அவர்கள் அன்று நடத்த வேண்டியிருந்தது. ஹாம்லெட் நாடகத்தின் நாயகி ஒபீலியா இறந்து விடுகிறாள். அவளுக்குக் கல்லறை கட்ட இருவர் இடுகாட்டில் குழிதோண்டிக் கொண்டிருக்கின்றனர். குழி தோண்டிக்கொண்டே அவர்கள் 'பிறப்போடு வந்தது இறப்பு. வாழ்வு நிலையற்றது' என்பதாகப் பேசுகின்றனர்.

எப்படி இருக்கும் பேராசிரியர் அவர்களுக்கு! பொங்கி வந்த துயரத்தை வெளிக் காட்டாமல், சுமார் இரண்டு மணி நேரம் 'உயிர்களின் நிலையாமை'யைப் பற்றி அருமையாகச் சொற்பொழிவாற்றினார். - எட்டயபுரம் கே. கே. ராஜன்

---

''எட்டிக்குப் போட்டி'' இரண்டாம் பதிப்பில், வேறொரு வடிவில் வெளியாயிற்று. அதன் இறுதி வாக்கியங்கள், கல்கியின் எழுத்தில் ரசிகமணி கொண்டிருந்த மதிப்புக்கு மற்றும் ஓர் அளவீடாக அமைந்தன:

ஒரு மாமாங்கத்துக்குள்ளே உலகத்திலே வேறு எங்குமே நிகழ்ந்திராத காரியம் நடந்து விட்டது. தமிழ் நாடு, தமிழ் மக்கள், தமிழ் பாஷை மூன்றுமாகச் சேர்ந்து நம்மை என்ன பாடெல்லாமோ படுத்துகின்றன; குலுங்கக் குலுங்கக் கூத்தாடிக் களிக்கச் செய்கின்றன.

தமிழ் நாட்டின் கலையும் பண்பாடும் ஆசிரியர் கல்கியினால் அபூர்வமான விளக்கம் பெற்றிருக்கின்றன. நடனம், சங்கீதம், ஓவியம், நாடகம், கவிப்-புலமை, எல்லாவற்றிலும் சிறந்து விளங்குகிறது தமிழ் நாடு. அக்கம் பக்கத்து நாடுகளில் உள்ளவர்களும் தமிழ்ப் பண்பாட்டை அங்கீகரித்து வியக்க ஆரம்பித்து விட்டார்கள்.

எல்லாம் தமிழ்ப் பாஷை செய்து சாதித்த காரியந்தான். தமிழ்ப் பாஷைக்குக் கருவியாக வாய்த்தவர் ஆசிரியர் கல்கி.

(தொடரும்)










பெவிலியனுக்குத் திரும்பிச் சாவதானமாகத் தமது வலது காலைத் தேய்த்து விட்டுக் கொள்ளும் போது நமக்கு விஷயம் புரியும்!

## சேப்பாக்கம் சிரிப்பு!




ரசிகனைப் பிடிக்க வாலண்டியர் ஓடினார்.


மாலையைப் பிடுங்கிக் கொண்டு அவனை விரட்டி விட்டு.....
தாமே.....


முதல்நாள் பயங்கரமாகத் தோற்றமளித்த ஹோல்டர்.....
சாமா


அடாடா! இவர்களையெல்லாம் மாட்சுக்கு அழைத்துப் போயிருக்க வேண்டும்!


...கடைசி தினத்தில்!



# சூ மந்திரக்காளி!

ஜெயின் கல்லூரி மாணவருக்கு ஓர் ஆரஞ்சுப் பழம் கொடுத்துப் பேசும் சக்தியை இழக்கச் செய்து விட்டார் ஓர் ஆசாமி!

மாணவனைப் பிறகு மந்திரவாதியாலோ, மனோதத்துவ நிபுணர்களாலோ குணப்படுத்த முடியவில்லை! இந்த விண்வெளி யுகத்தில் இப்படி ஒரு நிகழ்ச்சி!

'மந்திரஜால நிகழ்ச்சிகள்' என்றால் எனக்குச் சிறு வயதிலிருந்தே வெறுப்பு. ஜால வேடிக்கைகள் பிடிக்கும். ஆனால் 'மந்திரம், மாயம், குட்டிச்சாத்தான், மலையாள பகவதி, பத்திரகாளி, என்றெல்லாம் ஆரம்பித்தால் வெறுப்பைக் கக்குவேன்.



மாங்கொட்டையிலிருந்து செடி முளைக்கச் செய்யும் சிறு மாந்திரவாதிகள் இருக்கட்டும். கிராமங்களில் தங்கள் கணவன்மாரை வசியம் செய்வதற்காக மனைவிமாரும், ராட்சத மாமியார்களை வசியம் செய்வதற்காக மருமகள் மாரும் மந்திரவாதிகளிடமிருந்து வசிய மருந்து வாங்கித் திருட்டுத்தனமாய் அவர்களைச் சாப்பிடச் செய்து வருவதைக் காணலாம். அந்த மருந்துகளில் ஆந்தையின் பித்து, ஊமத்தங்காய்ச் சாறு, அபின், கஞ்சா முதலியன சேர்க்கப்பட்டிருக்கும். மந்திரம் ஒன்றுமில்லை.

நள்ளிரவில், சுடுகாட்டுக்குச் சென்று மந்திரங்கள் ஜபித்து, மண்டை ஓட்டை எடுத்து வந்து, பில்லி சூனியம் வைக்கும் மந்திரவாதிகள் இருக்கிறார்கள்! சூன்யம் வைக்கப்பட்ட வீடுகளில் உள்ளவர்களுக்கு ஏதாவது — வியாதிகளும், கஷ்டங்களும் ஏற்படுமாம்!

குறிப்பிட்ட ஒருவரின் உருவம் போல் மாவினால் பொம்மை அமைப்பார் மந்திரவாதி. பிறகு மந்திரங்களைச் சொல்லிக் கொண்டே அந்த உருவத்தின் மார்பில் குத்துக்கள் விடுவார். அதன் பயனால் அந்த ஆசாமியின் இதயம் பாதிக்கப்படுமாம்!

ஆப்பிரிக்கா கண்டத்தில் உள்ள 'காட்டுமிராண்டி' வகுப்பினர் இன்னும் இத்தகையவற்றில் நம்பிக்கையுள்ளவர்களாக இருக்கிறார்கள். ஏன், இந்தக் காலத்திலுள்ள மெத்தப் படித்தவர்களில் பலரும் தான்.

மந்திரங்களுக்கும் வித்தைகளுக்கும் சம்பந்தம் ஏதுமில்லை; எல்லாம் தந்திரந்தான் என்று முதன் முதலில் நிரூபித்தவர் ஜால வித்தை மன்னர் ஹௌடினி.

அவர் ஒரு ரயில் தண்டவாளத்தின் மீது படுத்துக் கொண்டு, தம்மைக் கட்டிப் போடச் சொன்னார். எக்ஸ்பிரஸ் ரயில் வண்டி மணிக்கு 70 மைல் வேகத்தில் வந்து கொண்டிருந்தது. ஆயிற்று, இன்னும் ஏழு நிமிஷங்களில் அது அவர் இருக்குமிடம் வந்துவிடும். ஆனால் ஐந்தே நிமிடங்களில் கட்டுக்களை எப்படியோ அவிழ்த்தெறிந்து விட்டுத் தப்பித்துக் கொண்டார் ஹௌடினி.

அவர் தமது ஜாலவித்தைகளைப் பற்றிய ரகசியங்களை வெளியிட்டு ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார் — 'ஆவிகள் பேசும் வித்தை முழுவதும் சுத்த ஹம்பக்' என்று கூறி மந்திரவாதிகளின் தந்திரங்களை அம்பலப்படுத்தி வந்தார்.

நமது தேசத்தின் பிரபல ஜால வித்தைக்காரர் பி.ஸி. ஸொர்க்கார் ஒரு பெண்ணைக் கண்ணாடிப் பெட்டிக்குள் படுக்க வைத்து, அவளை ஒரு ரம்பத்தினால் இரண்டாக அறுப்பார். அப்பொழுது இரத்தம் பீரிட்டு அடிக்கும். பிறகு அந்தப் பெண் வெளியிலிருந்துசிரித்துக்கொண்டே ஓடிவருவாள். அவர் 'சூ மந்திரக்காளி' 'வங், டங்' என்றெல்லாம் சொல்வதில்லை. தமது வித்தையின் ரகசியத்தைப் பற்றி 'மாந்திரீகத்தின் சரித்திரம்' என்று ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். அவர் தமது இந்த வித்தைக்கு இரண்டு பெண்களை, இரட்டையரை உபயோகித்தார்!



மாணவன் பாலகிருஷ்ணனை 'ஊமை'யாக்கியஅந்த எவனோ ஒருவன், மனோவசியம், அதாவது ஹிப்னாடிஸம் தெரிந்தவனாக இருக்கக் கூடும். அல்லது ஆரஞ்சுப் பழத்தில் எல். எஸ். டி. போன்ற மாத்திரையையோ அல்லது தற்காலிகமாக வாய் நரம்புகளைச் சக்தியற்றதாகச் செய்யக்கூடிய மருந்தையோ வைத்திருக்கலாம்.

போலீஸ் அதிகாரிகளும் இது விஷயத்தில் விசேஷ அக்கறை கொள்ளவில்லை. கல்லூரி அதிகாரிகளும் மாணவனை நல்ல வைத்தியரிடம் அழைத்துப் போனதாய்த் தெரியவில்லை. அவர்களும் மந்திர வசப்பட்டார்கள் போலும்!

—தமிழன்

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran




# பெருக்கிடும் சேமிப்பை என்றும்...

## மெரிட்*

### தையல் மெஷின் உதவியினால்

சிறியதாயிருக்கும் கிழிசல் நாளுக்குநாள் விரிசல் அடைகிறது. அதனால் பழையதை எறிந்து விட்டு புதியதொன்றை வாங்க நேருகிறது. இந்த விலைவாசி ஏற்றத்தில் அவசியமில்லாமல் பணத்தை ஏன் விரயமாக்க வேண்டும்? சிறியதாயிருக்கும் போதே கிழிசலை தைத்து விடுங்கள். அதுவும் மெரிட் தையல் மெஷின் உதவியினால்.

உங்களிடம் மெரிட் தையல் மெஷின் இல்லையேல் தட்டாமல் வாங்குவதற்கு இதுவே தக்க தருணம். ஒரே தடவையில் முழுப் பணமும் தர இயலாவிடில் சுலபமான தவணைகளில் வாங்குங்கள். உங்கள் மெரிட் தையல் மெஷின் வாங்கிய பணத்தை எவ்வளவு விரைவில் மீட்கிறீர்கள் என்பதை அறிந்து நீங்களே வியப்புறுவீர்கள். அதன் பிறகு உங்களுக்கு எல்லாமே மிச்சம்தான்.

யாவரும் அறிந்த உண்மை இது. உலகத்திற்கு தையற் கலையைக் கற்பித்தவர்களே நாங்கள்தான்.



# ஸிங்கர்

ஸிங்கர் ஸூயிங் மெஷின் கம்பெனி, 207, டி. என். ரோடு, பம்பாய் 400 001

*ஸிங்கர் கம்பெனியின் ட்ரேட்மார்க்.

CHAITRA-S-73 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



